# வளரும் விண்ணரசு



பிப்ரவரி 2021

ஆண்டுச் சந்தா ₹.30/-

# அன்புக்கட்டளையும் இறுதிக்கட்டளையும்




இந்திய திருச்சபை வளர்ச்சி மிஷன்

INDIA CHURCH GROWTH MISSION

## பொதுச்செயலரிடமிருந்து...



கிறிஸ்துவுக்குள் அன்பான வளரும் விண்ணரசு வாசக சகோதர சகோதரிகளுக்கு,

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இனிய நாமத்தில் வாழ்த்துக்கள்.

கர்த்தருடைய பெரிதான கிருபையால் இவ்வாண்டின் முதல் மாதம் முடிந்தது. செல்லப்பம்பாளையம் மற்றும் மதுரையில் பணித்தள ஊழியர்களுக்கென திட்டமிடும் கூட்டங்கள் (ஜனவரி 4,5) நடைபெற்றன.

இரண்டாம் வாரத்தின் முதல் நாள் ஆந்திராவிலுள்ள பணித்தளத்தை பார்வையிடத் தேவன் கிருபை செய்தார். அங்கும் தரிசனம் பரப்பும் பணி செய்யவும், பணித்தளங்களை மேலும் விரிவாக்கவும் நாங்கள் திட்டமிட முடிந்தது.



நக்லா மக்கள் இனத்தைக் குறித்து விசாரிக்கவும், அங்கு அருட்பணியைத் தொடங்கவுள்ள வாய்ப்புக் குறித்து ஆலோசிக்கவும் தேவன் உதவி செய்தார். ஆண்டவருக்கு சித்தமானால் வரும் நாட்களில் இந்த மக்கள் கூட்டத்தின் மத்தியில் பணியினை தொடங்க தீர்மானித்து இருக்கிறோம்.

தேவனுடைய பெரிய தயவால் சத்தீஸ்கர் மாநிலத்தில் ஹல்பா (Halba) இன மக்கள் மத்தியில் ஒரு ஆராதனை தொடங்கப்பட்டு நடைபெற்று கொண்டுவருகிறது.

நாராயண்பூர் மாவட்டத்தில் உள்ள ஹல்பா மக்கள் இனத்தினர் பழங்குடி மக்கள் கூட்டம் ஆகும். அற்பமான ஆரம்பங்கள் காலப்போக்கில் ஒரு People movement ஆக மாறுவது சாத்தியமே. தொடர்ந்து ஹல்பா மக்களுக்காக ஜெபிக்கும்படி அன்புடன் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த

தொடர்ச்சி.... 36ம் பக்கம்




பிப்ரவரி – 2021

மலர் : 22 இதழ்: 02

நிறுவனர்
டாக்டர். N.J. ஞானையா

ஆசிரியர் குழு:

அருள்திரு.G. பொன்னுராஜ்
அருள்திரு. இரா. ஜெயசீலன்
அருள்திரு.வெ. ஜான்
அருள்திரு. இம்மானுவேல் பாண்டி
அருள்திரு. திருஞானம்


இதழின் உள்ளே...




| | ஆண்டு சந்தா | ஆயுள் சந்தா |
|---|---|---|
| இந்தியா : | ₹.100/- | ₹.1000/- |



சந்திக்கப்படாத மக்கள் கூட்டங்களை சந்திக்கும் ஊழியத்திற்கு காணிக்கை அனுப்ப வேண்டிய முகவரி

ICGM

21, காமராசர் தெரு, ஆதி நகர்,
கிழக்குத் தாம்பரம், சென்னை-59.

வளரும் விண்ணரசு குறித்த விபரங்களுக்கு
தொடர்பு கொள்ள அலைபேசி : 9003916480

contacticgm@gmail.com




# இந்திய திருச்சபை வளர்ச்சி மிஷன்

**தரிசனம்:** (Vision Statement)

நமது இந்திய நாட்டின் அனைத்து மாநிலங்களில் வாழும் ஒவ்வொரு மக்கள் கூட்டத்திலும் சாட்சியுள்ள சுயசார்புள்ள திருச்சபைகள்.

**வேத ஆதாரம்:** (வெளி. 7 : 9)

"இவைகளுக்குப்பின்பு, நான் பார்த்தபோது, இதோ, சகல ஜாதிகளிலும் கோத்திரங்களிலும் ஜனங்களிலும் பாஷைக்காரரிலுமிருந்து வந்ததும், ஒருவனும் எண்ணக்கூடாததுமான திரளான கூட்டமாகிய ஜனங்கள், வெள்ளை அங்கிகளைத் தரித்து, தங்கள் கைகளில் குருத்தோலைகளைப் பிடித்து, சிங்காசனத்திற்கு முன்பாகவும் ஆட்டுக் குட்டியானவருக்கு முன்பாகவும் நிற்கக் கண்டேன்."

**செயல்திட்டம்:** (Mission Statement)

இயேசு கிறிஸ்துவின் சீடர்களாகிய நாம், இந்தியாவில் நற்செய்தி சென்றடையாத, தேவன் வழிநடத்துகிற மக்கள் கூட்டங்களுக்கு, நற்செய்தியைப் பிரசங்கித்து, அவர்களை சீடர்களாக்கி, சாட்சியுள்ள சுயசார்பு திருச்சபைகளை உருவாக்குகின்ற நோக்கத்தோடு செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம்.

**வேத ஆதாரம்:** (மத்தேயு 28 : 19-20)

"ஆகையால், நீங்கள் புறப்பட்டுப்போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்து, நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள். இதோ, உலகத்தின் முடிவுபரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனேகூட இருக்கிறேன் என்றார். ஆமென்."


வளரும் விண்ணரசு பத்திரிகைக்கு செக், டிராப்ட் மூலம் பணம் அனுப்புபவர்கள் " IRAI ARASU TRUST " என்ற பெயரில் அனுப்பவும். நன்றி!

அருட்செய்தி

# அன்பு கட்டளையும், இறுதி கட்டளையும்

அருள்திரு. அ. லெஸ்லி நாகராஜன்

இயேசுவின் காலத்து யூதர்கள் பழைய ஏற்பாட்டின் ஐந்து ஆகமங்களை விதிகளாக மாற்றி 613 சட்டங்களை வைத்திருந்தனர் அதில் செய்ய வேண்டியவைகள் 248, செய்ய கூடாதவைகள் 365 என பிரித்து, அவற்றை எல்லோரும் பின்பற்ற வேண்டும் என கூறினர். பரிசேயரும் சதுசேயரும் இவற்றை பிரதானமாக கைக்கொண்டனர்.

நம் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து மாற்கு 12:30ஆம் வசனத்தில் கற்பனைகளிலெல்லாம் பிரதான கற்பனை இதுவென்று கூறினார். "**உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழுஆத்துமாவோடும், உன் முழு மனதோடும், உன் முழு பெலத்தோடும் அன்புகூருவாயாக என்பதே பிரதான கட்டளை**" என்பதை நாம் தனித்தனியாக படிப்போம்.

**இயேசுவை முழு இருதயத்தோடு அன்புகூருதல்:**

இருதயம் என கூறப்படும்போது இதனை நாம் அறிந்துகொள்ள வேண்டும். வேதத்திலே நாம் இருதயத்தை பற்றி பல காரியங்களை வாசிக்கிறோம். மாற்கு 7:21இல் இருதயம் என்பது (கார்டியாஸ்) தீட்டுக்களின் ஊற்றாக இருக்கிறது. இப்படிப்பட்ட நம் இருதயங்களில் இருந்து இயேசுவின் மீது நாம் அன்புகூர வேண்டும் என்பது ஒரு பெரிய சவாலாகும்.

ரோமர் 5ஆம் அதிகாரத்தில் 5ஆம் வசனத்தில் "**மேலும், நமக்கு அருளப்பட்ட பரிசுத்த ஆவியினாலே தேவ அன்பு நம்முடைய இருதயங்களில் ஊற்றப்பட்டிருக்கிறபடியால் .....**" என வாசிக்கிறோம். திருக்குள்ளதும் கேடுள்ளதுமான இருதயம் பரிசுத்த ஆவியானவரால் மாற்றப்படும்போது, நாம் முழு இருதயத்தோடு தேவனிடத்தில் அன்புகூற முடியும். அன்புகூருதல் என்பது ஒரு வளர்ச்சியின் அநுபவம். திருக்குள்ள இருதயம் அன்பு கூருவதாக நடிக்கிறது. பல சமயங்களில் இருதயத்தின் நினைவுகளை மனிதர்களால் அறிந்துகொள்ள முடியாததால், மாய்மாலம் நமக்கு வாழ்க்கையின் நடைமுறையாக மாறி, நாம் நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளுகிறோம்.

இருதயத்தில் திருக்குத்தனம் மிக பரவலாக நம்மிடையே காணப்படுகிறதினாலேயே, பலவித கெட்ட காரியங்களை செய்தும் கூட உணர்வில்லாமல் நாம் எதைப்பற்றியும் கவலைப்படாமல் ஆராதிக்க முடிகிறது. முழு இருதயத்தின் அன்பு என்பதின் பொருள், உண்மையான, மாய்மாலமற்ற அன்பாகும். அதனாலேதான் தாவீதும் சங்கீதம் 51:6ல் Chaphatzta என்ற எபிரேய வார்த்தையின் பொருள் "உள்ளத்தில்" (உள்ளான பகுதிகளில் Inward Parts) என மொழிபெயர்க்கப் பட்டுள்ளது.

பல சமயங்களில் மதசடங்காச்சாரங்களும், ஆராதனைகளும் மாற்று மருந்துபோல செயல்பட்டு, இருதயத்தின் உண்மை நிலையை சிந்திக்க, மனந்திரும்ப அனுமதிப்பதில்லை. ஆலயம் நிறைய வெற்று மனிதர்கள் மனந்திரும்புதல் இல்லாமல் ஆர்ப்பாட்டமாக, பயபக்தியாக உருக்கமாக பாடவும், ஆராதிக்கவும் முடிகிறது.



இருதயத்தின் உண்மை மிகவும் முக்கியமானது. கலப்பில்லாத உண்மையான அன்பினால் நாம் தேவனை நேசிக்க வேண்டும். சுத்த இருதயத்தினால் மாத்திமே நாம் முழுமையாக ஆண்டவரிடம் அன்புகூற முடியும்

**முழு ஆத்துமாவோடும் அன்புகூருதல்:**

உணர்வுகளுடன் ஆண்டவரிடம் அன்புகூருவதை இந்தப் பகுதி கூறுகிறது. வெளிப்படையாக உணர்வுகளுடன் நாம் அன்புகூற வேண்டும். இயேசுவும் லாசரு இறந்ததை கேட்டு கண்ணீர் விட்டார் என யோவான் 11:25இல் வாசிக்கிறோம். உணர்ச்சிகள் இல்லாமல் அன்புகூற முடியாது. மீண்டும் யோவான் 11:26இல் "**...அப்பொழுது யூதர்கள் இதோ இவர் அவனை எவ்வளவாய்ச் சிநேகித்தார் (அன்புகூர்ந்தார்) என்றார்கள்**" இருதயம் இல்லாமல் உணர்ச்சிகளுடன் அன்புகூருவதையே இயேசு மத்தேயு 15:8ல் கூறுகிறார். "**இந்த ஜனங்கள் தங்கள் வாயினால் என்னிடத்தில் சேர்ந்து தங்கள் உதடுகளினாலே என்னை கனம்பண்ணுகிறார்கள்; அவர்கள் இருதயமோ எனக்கு தூரமாய் விலகியிருக்கிறது**" என்று கூறுகிறார். உணர்ச்சிகள் உள்ளவராக நாம் ஆண்டவரை ஆராதிக்கும்போது நமது இருதயத்தையும் நாம் கவனித்துக் கொள்ள வேண்டும்.

**முழுமனதோடு அன்புகூருதல்:**

மனது இல்லாமல் அன்புகூருதல் ஆபத்தானது. ஒரு பிரசங்கி மிகவும் உணர்ச்சிவசப்பட்டு தேவசெய்தி கொடுத்தார். அதைக்கேட்ட ஒரு வாலிபனும் உணர்ச்சிவசப்பட்டு "இயேசுவுக்காக நான் இரத்தம் சிந்த ஆயத்தம் என தன் பேனாவால் கையைக் கிழித்துக் கொண்டான்"

மனைவி மின்சாரத்தால் தாக்கப்பட்டபோது அன்பினால் (புத்தியில்லாமல்) மின் இணைப்பை துண்டிக்காமல் காப்பாற்ற சென்று உயிரை மாய்த்துக் கொண்ட வாலிபரை குறித்து நாம் செய்தித்தாளில் வாசிக்கிறோம். அறிவில்லாத அன்பு ஆபத்தானது. நாம் இயேசுவை நேசிக்கும்போது அறிவுப்பூர்வமாக நேசிக்க வேண்டும்.

நாம் நம் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவிடம் அன்புகூரும்போது அது அறிவுப்பூர்வமாக இருக்க வேண்டும். சாக கிடக்கும் நண்பருக்கு மருத்துவ உதவி செய்யாமல் 'கோட்டும் சூட்டும் வாங்கி அன்பாய் கொடுப்பது மனதில்லாத அன்புகூறுதல்.

முழுமனதோடும் உன் ஆண்டவராகிய இயேசுவை அன்புகூறுதல் சிந்தனையோடும் அறிவோடும் அன்புகூற வேண்டும். எனக்கு அதிகமாக ஆண்டவர் மன்னித்திருக்கிறார் என்று நான் அறியும்போது நான் அதிகமாக அன்புகூற முடியும்.

பலவருடங்களுக்கு முன்பு என் மகனுக்கு ஒரு விபத்து ஏற்பட்டது. ஆம்புலன்சில் ஏற்றி அவனை கொண்டுபோகும்போது என்னால் ஒன்று செய்ய முடியவில்லை. ஆனால் கண்ணீர் மட்டுமே சிந்த முடிந்தது. பொறுமையாக வாகனத்தில் அமர்ந்து ஜெபித்துக் கொண்டே வந்தேன். என் இருதயத்தின் ஆழத்தில் என் மகனை நேசித்தேன். என் ஆத்துமாவில் நான் அன்புகூர்ந்தபடியால் கண்ணீர் தாரை தாரையாக கொட்டியது. என் மனதில் திட்டமிட்டு பெரிய மருத்துவமனையை நோக்கி சென்று கொண்டிருந்தேன். தேவனிடம் அன்புகூறுவதும் அதுபோலதான்.

**முழுபலத்தோடும் அன்புகூருதல்:**

ஒவ்வொருவருக்கும் பலம் இருக்கிறது. சிலருக்கு அறிவு பலம், சிலருக்கு சரீரபலம் சிலருக்கு பணபலம். நம்மில் சிலருக்கு நேரம் இருக்கிறது. சிலருக்கு

திறமைகள் இருக்கின்றன. இவ்விதமாக நமக்குள்ள பலவித பெலத்தை கொண்டு நாம் ஆண்டவரிடம் அன்புகூற வேண்டும்.

நாம் முழுபலத்தோடு ஆண்டவரிடம் அன்புகூருவதில்லை. நமக்கு பத்தில் ஒன்றுதான் ஆண்டவருக்கு என சொல்லி கொடுத்திருக்கிறபடியால், நாம் தசமபாகம் கொடுத்துவிட்டால், ஆண்டவரிடம் அன்புகூர்ந்துவிட்டோம் என நினைக்கிறோம். முழுபலத்துடன் ஆண்டவரிடம் அன்புகூருகிறவர்கள் "**தாங்கள் தங்களுடையவர்கள் அல்ல**" என அறிந்திருக்கிறார்கள். 1 கொரி. 6:19 "**.... நீங்கள் உங்களுடையவர்கள் அல்லவென்றும் அறியீர்களா?**" என பவுல் எழுதுகிறார்.

எனவே, ஆண்டவரிடம் நாம் அன்புகூறும்போது, முழு இருதயத்தோடும் மாய்மாலமில்லாமல் உண்மையாக அன்புகூற வேண்டும். உணர்வுகளுடன் முழுஆத்துமாவோடு அன்புகூற வேண்டும். நாம் முழுமனதுடன் அறிவுப்பூர்வமாக மற்றும் நமக்குண்டான எல்லா பெலத்தோடும் அன்புகூற வேண்டும். இதுவே பிரதான கட்டளை.

**இறுதி கட்டளை:**

இயேசு கிறிஸ்து, அவரைப் பின்பற்ற விரும்பியவர்களை பார்த்து, தங்களை தாங்களே வெறுத்து சிலுவையை எடுத்துக்கொண்டு அவரைப் பின்பற்றியவர்களைப் பார்த்து "**நீங்கள் புறப்பட்டுப்போய் சகல ஜாதிகளையும் சீஷராக்குங்கள்**" என கூறினார்.

இந்த சீஷர்கள் எனப்படுகிறவர்கள் இயேசுவை உண்மையான இருதயத்தோடும், பாடுகளையும், சாவையும் கண்டு அஞ்சாமல் புத்தியோடுகூட முழுபெலத்தோடும் அவரை அன்புகூறுவர்களைப் பார்த்து இந்த இறுதி கட்டளையை கொடுத்தார்.

**இறுதி கட்டளைக்கு அன்பு தேவை:**

இறுதி கட்டளை நிறைவேற்றுகிறவர்கள் பிரதான கட்டளையாகிய அன்பு கொண்டிருக்க வேண்டும். அதனால்தான் பவுலும் கிறிஸ்துவின் அன்பு எங்களை நெருக்கி ஏவுகிறது என்கிறார்.

இறுதி கட்டளை நிறைவேற்ற ஆட்கள் தேவை. சந்திக்கப்படாத மக்கள் கூட்டங்களை சந்திக்க, அவர்களை சீஷராக்க, அவர்களை உண்மையாக நேசிக்கிற மக்கள் தேவை. இயேசு கிறிஸ்துவும் யோவான் 21ம் அதிகாரத்தில் பேதுருவிடம் பேசும்போது, தேவன் மீதுள்ள அன்பை உறுதிபடுத்திய பின்னே அவருக்கு பொறுப்பு கொடுத்தார்.

தன்னைத்தான் வெறுத்து இயேசுவை மாத்திரம் முழு இருதயதோடும் (கபடமில்லாமல்) முழு ஆத்துமாவோடும், முழு மனதோடும், முழு பெலத்தோடும் அன்புகூறுகிறவர்கள் மாத்திரமே அருட்பணி அல்லது இறுதிகட்டளையாகிய "**புறப்பட்டுபோய் சகல ஜாதிகளையும் சீஷராக்குங்கள்**" என்பதற்கு கீழ்ப்படிய முடியும்.

**இறுதி கட்டளையும் அன்பு கட்டளையே.**
**உள்ளத்தில் அவர்பால் பேரன்புள்ளோர் எண்ணத்தில் தெளிவை பெறுவீர்.**
**தேசங்கள் தீவுகள் பல பிராந்தியங்கள்**
**பாவத்தால் நிறைந்து சாபமாகிறதே.**
**திறப்பின் வாசலில் நிற்கத்தக்கதாக**
**தேவன் தேடும் நபர் நம்மிலே யார் யாரோ?**






அருட்பணியாளர்களை அளவில்லாமல் நேசித்ததினால்தானோ என்னவோ அன்பு அண்ணன் திரு.J.J. ரத்தினகுமார் அவர்கள் ஆரம்பித்த இயக்கத்திற்கு அருட்பணியாளர் ஆதரிப்போர் இயக்கம் என்று பெயரிட்டார்.

அருட்பணி எந்த அளவுக்கு இன்றியமையாததோ அதே அளவுக்கு அருட்பணியாளரும் இன்றியமையாதவர்கள் என்பதை அறிந்து செயல்பட்ட மிகச்சிலரில் இவரும் ஒருவர். அருட்பணியாளரின் உடல் நலனிலும், மன நலனிலும், அருட்பணியாளரின் வளமையான வாழ்க்கையிலும் தீவிர அக்கறைக் காட்டியவர். சென்னை, ஒட்டன்சத்திரம் மற்றும் வேலூரிலுள்ள MUT இல்லங்களுக்கு ஓய்வுக்காகவும், மருத்துவச் சிகிச்சைக்காகவும் வந்து போகாத அருட்பணியாளர்கள் மிகவும் குறைவே.

நமது இயக்கத்தின் பொதுக்குழு உறுப்பினராகவும், செயற்குழு உறுப்பினராகவும் இருந்து இயக்கத்திற்கு வேண்டிய நல்ஆலோசனைகள் வழங்கியவர்.

இயக்கங்களுக்கும் சபைகளுக்கும் அப்பாற்பட்டவராக அனைத்து இயக்கங்களையும், திருச்சபைகளையும் நேசித்த ஒரு அற்புதமான தேவ மனிதர்.

ஜனவரி 18, 2021 அன்று அவர் தேவனுடைய இராஜ்யத்துக்குள் பிரவேசித்தார். 19.01.2021 அன்று அவருடைய அடக்க ஆராதனை நடைபெற்றது. அவருடைய இழப்பு என்பது இந்திய அருட்பணி இயக்கங்களுக்கு பேரிழப்பாகும். அவரது எளிமையான வாழ்க்கை மற்றும் விண்ணரசு பூமியில் மலர்வதற்காக அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகளுக்காகவும் ஆண்டவருக்கு நன்றி செலுத்துகிறோம்.

அவரை இழந்து தவிக்கும் அவர்தம் துணைவியாருக்கும் (திருமதி. சாந்தி ரத்தினகுமார்) பிள்ளைகளுக்கும் மற்றும் MUT நிறுவனத்திலுள்ள ஊழியர்களுக்கும் தேவன் ஆறுதல் தர ஜெபிக்கிறோம்.

அறிவோம் தமிழக மாவட்டங்களை...!

# செங்கல்பட்டு

அருள்திரு.இரா. ஜெயசீலன்

செங்கழுநீர் பூக்கள் நிறைந்த நீர்நிலைகளினால் இப்பகுதி செங்கழுநீர்ப்பட்டு என அழைக்கப்பட்டு இன்று செங்கல்பட்டு எனப்படுகிறது. **சென்னையின் நுழைவாயில்** எனப்படும் தாம்பரத்தை தன்னகத்தே கொண்ட செங்கல்பட்டு மாவட்டம் வரலாற்று பின்னணி கொண்டது. பல்லவர், விஜயநகரப் பேரரசு, தக்காண சுல்தான்கள், டச்சு மற்றும் ஆங்கிலேயர்கள் செங்கல்பட்டு நகரத்தை மையமாகக் கொண்டு செயல்பட்டனர். அந்நாட்களில் கருநீலம் தயாரித்தல், தோல் பதனிடுதல், பட்டு நெய்தல், கடலோரங்களில் உப்பெடுத்தல் போன்ற வணிக செயல்பாடுகள் நடந்தேறின. இதற்கு ஆதாரமாக கி.பி 1740இல் கட்டப்பட்ட ஆலம்பரைக் கோட்டைத் துறைமுகம் வியாபாரத்தலமாக இருந்தது.

**சிறப்புகள்:**

கல்பாக்கம் அணுமின் நிலையம், வேடந்தாங்கல் பறவைகள் சரணாலயம், வண்டலூர்–அண்ணா வன விலங்குகள் காப்பகம், தாம்பரம் சானடோரியம் அரசு நுரையீரல் நோய் சிகிச்சை மருத்துவமனை, இந்திய வான்படைத்தளம், சென்னைக் கிறித்தவக் கல்லூரி, பல்லாவரம் வாரச் சந்தை, மதுராந்தகம் ஏரி, சென்னை கடற்கரை–தாம்பரம் மின்தொடர் வண்டி, புதிதாக அமைய உள்ள ஊரப்பாக்கம்–கிளாம்பாக்கம் மாபெரும் புறநகர் பேருந்து நிலையம், 57 கி.மீ நீளமுள்ள கடற்கரை மற்றும் 78 கி.மீ நீளமுள்ள கிழக்குக் கடற்கரைச் சாலை போன்ற எண்ணற்ற சிறப்புகளைக் கொண்ட இம்மாவட்டத்தில்தான், இந்திய திருச்சபை வளர்ச்சி மிஷனின் நிர்வாக அலுவலகம் கிழக்குத் தாம்பரத்திலுள்ள ஆதிநகரில் செயல்பட்டு வருகின்றது.

**மக்கள்:**

25,56,244 மக்கள் எண்ணிக்கையுள்ள இம்மாவட்டத்தில், ரெட்டியார், முதலியார், கல்ஓடர், டொங்கடாசரிஸ், கொறவர், இருளர், நாடார், கிராமணி, வன்னியர், மீனவர், செம்படவர், முகையர், பரவர், ஜோகிஸ், கேப்மாரிஸ், தொட்டியநாயக்கர், பறையர், அருந்ததியர் மற்றும் தொழில்வேண்டி குடியேறிய மலையாளிகள், தெலுங்கர்கள் திரளான வடஇந்தியர்கள் என பல்வேறு இன மக்கள் இங்கு வசிக்கின்றனர். 2950 ச.கி.மீ பரப்பளவில் 25.56 இலட்சம் மக்கள் வசிக்கின்றனர். 636 கிராமங்களால் நிறைந்த இம்மாவட்டத்தில் விவசாயம் கொழிக்கின்றது.

**நிர்வாகம்:**

தாம்பரம், செங்கல்பட்டு மற்றும் மதுராந்தகம் ஆகிய மூன்று வருவாய்க் கோட்டங்களும், செய்யூர், வண்டலூர், திருக்கழுக்குன்றம், திருப்போரூர், பல்லாவரம், மதுராந்தகம், தாம்பரம், செங்கல்பட்டு ஆகிய வட்டங்களும், தூய தோமா மலை, சித்தாமூர், லத்தூர், அச்சரபாக்கம், காட்டாங்கொளத்தூர், மதுராந்தகம், திருப்போரூர் மற்றும் திருக்கழுக்குன்றம் ஆகிய ஊராட்சி ஒன்றியங்களும் மாவட்ட நிர்வாகத்திற்கு ஆதாரங்களாக உள்ளன.



**விவசாயம்:**

**ஏரிகளின் மாவட்டம்** எனப்படும் இம்மாவட்டத்தில் 528 பெரிய மற்றும் 549 சிறிய நீர்நிலைகள் நிறைந்துள்ளன. நில ஆக்கிரமிப்புகளால் நீர்ப்பரப்புகள் வெகுவாக குறுகிவிட்டன. 1241 கிணறுகள் விவசாயத்திற்கு பேருதவியாக உள்ளன. பாலாறு, நீஞ்சல் மடுவு, புக்காத்துரை ஓடை, கிளியாறு, அடையாறு, செய்யாறு, ஓங்கூர் போன்ற நீர்வழி ஆதாரங்கள் நீர்ப்பாசன வசதி தருகின்றன.

இங்கு நெல், நிலக்கடலை, உளுந்து, பாசிப்பயறு, காராமணி, எள், கத்திரி, வெண்டை, வெற்றிலை, கரும்பு, சவுக்கு போன்றவை பயரிடப்படுகின்றன. அரசு கூட்டுறவு சர்க்கரை ஆலை– மதுராந்தகத்திற்கு அருகில் படலம் என்ற இடத்தில் உள்ளது.

**தொழிற்சாலை:**

சிறுசேரி சிப்காட்–ஆசியாவிலேயே மிகப்பெரியது. சென்னை தகவல் தொழில்நுட்பப் பூங்கா தாம்பரத்திலும், டெட்ராய்ட் எனப்படும் மறைமலை நகரில் ஆட்டோமொபைல் தயாரிப்புத் தொழிலும், மகேந்திரா தொழில்நுட்ப நகரமும், கடல்நீரை குடிநீராக்கும் நீர் சுத்திகரிப்பு நிலையமும், கல்பாக்கம் அணுமின் நிலையமும் இம்மாவட்டத்தின் சிறப்புகளாகும். தோல் பதனிடுதல், இரப்பர் தொழிற்சாலை, சல்லி மற்றும் பாறை மணல் தொழில், குடிநீர் சுத்திகரிப்பு நிலையங்கள், பிளாஸ்டிக், தரை ஓடு மற்றும் சவுக்கு மர வியாபாரம் கோலோச்சுகின்றன.

**சுற்றுலா:**

முதலைப் பண்ணை, வண்டலூர் அண்ணா உயிரியல் பூங்கா, தட்சணசித்ரா– பண்பாட்டுக் கலாச்சார மையம், சாளுவன்குப்பம் புலிக்குடைவரை சிற்பம், முத்துக்காடு மற்றும் முதலியார் குப்பம் படகுச் சவாரி, கோவளம் மீன்பிடித் துறைமுகம், மாமல்லபுரம் கற்கோவில் சிற்பங்கள், வேடந்தாங்கல் பறவைகள் சரணாலயம் குறிப்பிடத்தக்கன. உத்தமசோழன் காலத்தில், 10ஆம் நூற்றாண்டில் மதுராந்தகம் ஏரி வடிவமைக்கப்பட்டது. 1798இல் லியோனா என்னும் கிறித்தவ மாவட்ட ஆட்சியரால் தானியங்கி மதகுகள் அமைக்கப்பட்டு, கரைகள் வலுப்படுத்தப்பட்டன.

**கிறித்தவம்:**

இங்கு 6.42 சதவீத கிறித்தவர்கள் உள்ளனர். தாம்பரம், பம்மல், செம்பாக்கம், தூய தோமா மலை, பெருங்குடி, ஆதம்பாக்கம், பீர்க்கன்கரணை, வேங்கைவாசல் போன்ற இடங்களில் மிகுந்துள்ளனர். தாம்பரம்–சென்னைக் கிறித்தவக் கல்லூரி, 1893இல் ஸ்காட்லாந்து அருட்பணியாளர் ஆதம் ஆண்ட்ரூ என்பவர் சமுதாயத்தால் ஒதுக்கப்பட்ட கிறித்தவக் குடும்பங்கள் குடியேறி வாழ வாங்கிய 72 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள தென்னிந்திய திருச்சபை ஈவார்ட்ஸ் பெண்கள் கிறித்தவக் கல்லூரி–மெல்ரோசாபுரம், கொலம்பஸ், தூய ஜோசப், சீயோன் பள்ளிகள் போன்ற கல்வி நிலையங்கள் இம்மாவட்டத்தை கல்விப்பணியில் வளம்பெறச் செய்துள்ளன. செய்யூர், திருப்போரூர், திருக்கழுக்குன்றம் மற்றும் மதுராந்தகம் வட்டங்களில் கிறித்தவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவே.

**பேரிடரும்–பேருதவியும்:**

சுனாமி, வெள்ளம், பெருமழைச்சொறிவு, பஞ்சம், அணுமின் பாதிப்பு, கோடை அனல் பாதிப்பு, தொழில்பேட்டைகளின் செயல்பாட்டால் வரும் கழிவுப் பாதிப்பு, வேங்கடமங்கலத்தில் எரிக்கப்படும் குப்பைகளால் உண்டாகும் சுற்றுச் சூழல் மாசு, கடல் மண்ணரிப்பு போன்ற இடர்பாடுகள் கொண்ட இம்மாவட்டத்தில் வாழ்கின்ற

மக்களை காப்பதற்கு அரசு பிரயத்தனம் பண்ணினாலும், அழிவின் ஆக்கிரமிப்பு அகன்றபாடில்லை. சாலை விபத்து பெருகிவரும் சூழலில் மக்கள் காக்கப்பட ஜெபிப்போம்.

பெரிய வெண்மணி, சிதண்டி, அருங்குணம், நென்மேலி, நெய்குப்பி, விளாகம், வேங்கை வாசல், இரும்புலிசேரி, புலிப்பாக்கம், தீட்டாளம், வேடந்தாங்கல், பொற்பணங்கரணை, முருங்கை, ஓரத்தி, பாதிரி, அகிலி, பருக்கல், நுகும்பல், அகரம், அம்மணம்பாக்கம், செடிப்புண்ணியம், பெருந்தண்டலம், பொன்மார், கொடூர், நெல்வாய், வட பட்டணம், தென் பட்டணம், நெமந்தம், பட்டிப்புலம், மானாமதி, மைலை, காயார், கூவத்தூர் போன்ற இலக்கியத் தமிழ் பெயர் கொண்ட அநேக கிராமங்கள் உள்ளன. வலது கைக்கும் இடது கைக்கும் வித்தியாசம் தெரியாத இம்மாவட்ட மக்கள் இனங்கள் கிறித்துவை அறியாமல் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். செய்யூர் தாலுகாவில் கல்வியறிவு **66** சதவீதமே! எல்லாவற்றிலும் பின்தங்கியுள்ள இம்மாவட்ட மக்களுக்காக, நகரங்களில் நிறைந்துள்ள கிறித்தவ ஊழியங்கள் கிராமங்கள் பக்கமாக திரும்பி அருட்பணி இறையரசை நிறுவ மன்றாடுவோம்.

**...அறுப்பு மிகுதி; வேலையாட்களோ கொஞ்சம். ...அறுப்புக்கு எஜமான் தமது அறுப்புக்கு வேலையாட்களை அனுப்பும்படி அவரை வேண்டிக்கொள்ளுங்கள்.** மத்தேயு 9:37–38.

முதுமையின் கதறல்–1

## ஜீவ ஆற்றுப்படையாய் என்னை மாற்றி விட்டீர்

**Dr.N.J.G.**

ஏசுநாயக சருவலோக நாயக
கிருஸ்து இயேசு நாயக சுவாமியே!

உம்மையே தேடுவேன்–
உம்மையே பாடுவேன்
உம்மையே நாடுவேன்–நாள்தோறுமே!

கண்ணீர் வடிக்கிறேன்– பரவசமாகி
கவிகள் பாடுகிறேன்–கல்மனம் கரைய
தண்ணீர் வேண்டி அலையும் மான்போல்
தவிக்கிறேன் தவிக்கிறேன் தாகம் தணிய

உள்ளம் உருகுது உன்
அன்பை நினைத்து
உண்மை தெரியாத
மக்களையும் நினைத்து
கள்ள நெஞ்சன் நான்
கல்வாரி காட்சியால்

உருகுகிறேன் உருகுகிறேன்
உள்ளம் உடைய

ஜெபிக்கிறேன் ஒருபுறம் உம்பாதம் நோக்கி
தவிக்கிறேன்மறுபுறம் என்பாவம் தாக்கி
தடுமாறி விழுந்தாலும் தாங்கிடுவீர் நீரே
தெளிகிறேன் தெளிகிறேன்
தினந்தோறும் நானே

ஜீவ ஆற்றில் மூழ்கினேன்
ஜீவனும் பெற்று விட்டேன்
ஜீவ ஆற்றுப் படையாய்
என்னை மாற்றிவிட்டீர்
அருட்பணி செய்ய நேசமாய் இன்று
அர்ப்பணிக்கின்றேன் ஆசையாய் நின்று

ஏசுநாயக சருவலோக நாயக
கிருஸ்து இயேசு நாயக சுவாமியே!



# துதித்து மன்றாடுவோம்



ஞாயிறு

## தமிழ்நாடு

**.வேலூர் மாவட்டம்** **அருட்பணியாளர் : ஏசுதாஸ் – கிருபா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட விரிஞ்சிபுரம், செதுவாழை, கழிஞ்சூர், ராணிப்பேட்டை ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட விக்கி, சூர்யா, மல்லிகா, அர்ஜுன், யசோதா, துரைசாமி, குமார், விஜயபாபு குடும்பம், அம்பிகா, சாமுண்டீஸ்வரி, சிவக்குமார் குடும்பம், சிவராம், இளங்கோ ஆகியோருக்காக கர்த்தரை துதிப்போம். தாயை இழந்த கௌதம், தனுஷ் ஆகியோருக்கு தேவன் ஆறுதல் தர, பெஞ்சமின், ராஜன், அமிதாப்பச்சன், ஜான் ஆகியோருக்கு வேலை கிடைக்க ஜெபிப்போம்.

**கள்ளக்குறிச்சி மாவட்டம்** **அருட்பணியாளர்: காவியகாந்த் – செல்வி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட வென்னியூர், கென்டிக்கல், கொட்டபுத்தூர், எருக்கம்பட்டு, ஊத்துக்காடு ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட பேபி, தங்கத்துரை, கோவிந்தராஜ், பழனிச்சாமி, பாக்கியராஜ், சின்னய்யன், சுந்தர் ஆகியோருக்காக துதிப்போம். வாகன விபத்தில் சிக்கி தலையில் பலத்த காயத்துடன் மருத்துவமனையில் உள்ள பாண்டி விரைவில் சுகம் பெற ஜெபிப்போம்.

**கடலூர் மாவட்டம்** **அருட்பணியாளர் : லிங்கம் – கலா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட அருகேரி, பெண்ணாடம், பொன்னேரி, எறப்பாவூர் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட தமிழரசன், செல்வி, பாலகிருஷ்ணன், கொழஞ்சி, மணிவேல், ஜூலி, காரல் மார்க்ஸ், தர்மராஜ் ஆகியோருக்காக. புதிதாக ஆலய ஆராதனையில் பங்கு கொள்ளும் இன்பரசி, சக்திதேவி, தமிழரசி மேரி, கருப்பையா ஆகியோருக்காக துதிப்போம். சல்ஜா, விஜயகுமார் ஆகியோர் இரட்சிக்கப்பட, பொன்னேரியில் மீண்டும் ஜெபக்குழு நடத்தப்பட, சபை நிலத்தை சுற்றி வேலி அமைக்கப்பட, வீட்டிற்கு தனி மின் இணைப்பு வாங்கப்பட ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : V.சிவராமன் – பெரியநாயகி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட சுமைதாங்கி, கீரனூர், செம்பேரி, சின்ன கொசப்பள்ளம், இருளம்பட்டு ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட புனிதவள்ளி, பத்மா, தாமரைசெல்வன், அருள்மொழித் தேவன், அபிதா, அட்சயா, ஷர்மிளா ஆகியோருக்காக புதிதாக ஆலயம் வரும் கோபாலகிருஷ்ணன், அகிலன், சிவபாலன், கவியரசன், மணிமொழி, காவியா, ஆனந்தி ஆகியோருக்காக துதிப்போம். சோபியா திருமணம் ஆசீர்வாதமாக நடைபெற, அஜீத் தீராத வயிற்றுவலியிலிருந்து நிறைவான சுகம் பெற ஜெபிப்போம்.

**நாமக்கல் மாவட்டம்** **அருட்பணியாளர் : S. சாமுவேல் – ரோகிணி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட மணியன்கால்பட்டி, காக்காதோப்பு, பேட்டைப்பாளையம், வண்டிக்கேட்டு, மோகனூர், வாங்கல் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக சந்திக்கப்பட்ட வாங்கல் கிராமத்திற்காக, சுந்தர், சித்ரா, சத்யா, வாசுகி, பிரபாகரன், தமிழ், கரண் ஆகியோருக்கு நற்செய்தி அறிவிக்கப்பட்டதற்காக துதிப்போம். ஆராதனை நடத்த இடம் தரும் நவீன் குடும்பத்திற்காக, மூன்று ஜெபக்குழுவை ஒன்றாக இணைத்து ஆராதனை நடத்த, சரண்யாவுக்கு குழந்தை பாக்கியம் கிடைக்க ஜெபிப்போம்.

**ஈரோடு மாவட்டம்** **அருட்பணியாளர்: தனம் யோகராஜு – டான்சி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட கணவனூர், ஏழூர், குறுவை, எம்.பாளையம், மூங்கில் பாளையம், முரளி ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக சுவிசேஷம் கேட்ட நிவேதா, அருண், பார்த்திபன், செல்லம்மா, மணிமேகலை, வளர், மீனா, வீரன், அருண், கிருஷ்ணன், ஜெயசுதா, செல்வி, தனசேகர் ஆகியோருக்காக துதிப்போம். ஜோதிபுரம், கணவனூர் பகுதியில் புதிய ஜெபக்குழு ஆரம்பிக்கப்பட, வாலிபர்கள் அருட்பணியாளராக அர்ப்பணிக்க ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : அதிசய அமலன் - ஆனந்தி விமலா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட வெட்டம்பாளையம், ஆண்டிப்பாளையம், எலத்தூர், பானார்புதூர் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட ராசு, மணி, சித்ரா, லோகு, செல்வநாயகி ஆகியோருக்காக துதிப்போம். நற்செய்திக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் பழனிச்சாமி, கமலக்கண்ணன், மனோகரன் ஆகியோர் இரட்சிக்கப்பட, ஞாயிறு ஆராதனை நடைபெற நிலையான இடம் கிடைக்க ஜெபிப்போம்.

## கோயம்புத்தூர் மாவட்டம்

**சுயசார்புத் திருச்சபை**

**அருட்பணியாளர் : திரு. லூர்ட்ஸ் - கிளாடிஸ்**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட அங்காலகுறிச்சி, கோட்டூர், அங்கம்பாளையம், பொன்னாசியூர், கரையான்செட்டிப்பாளையம், சமத்தூர் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக சுவிசேஷம் கேட்ட மாரியப்பன், கார்த்திக், முத்துவேல் ஆகியோர் இயேசுவை ஏற்றுக்கொண்டதற்காக துதிப்போம். சுவிசேஷம் கேட்டவர்கள் இரட்சிக்கப்பட, மூட்டு அறுவை சிகிச்சை செய்து நடக்க முடியாமல் கஷ்டப்படும் காட்வின் அவர்கள் சுகம்பெற ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : எபிநேசர் உவைட் - மேரி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட தொண்டாமுத்தூர், மாமரத்துப்பட்டி, குருஞ்சேரி, குமாரபாளையம் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட ராமசாமி, பாலு, மொக்கராசு, அசோக், விமலா, ராசு, பெருமாள், திருமலைச்சாமி ஆகியோருக்காக, பின்வாங்கிப்போன அற்புதராஜ் குடும்பம் மீண்டும் ஆலய ஆராதனையில் பங்கு பெற்றதற்காக துதிப்போம். பிரேம் குடும்பம், தீனா குடும்பம் இரட்சிக்கப்பட, வாலிபப்பிள்ளைகளுக்கு ஏற்ற வாழ்க்கை துணை கிடைக்க, விசுவாசிகள் யாவரும் சீஷர்களாக மாற ஜெபிப்போம்.

**சுயசார்புத் திருச்சபை**

**அருட்பணியாளர் : இம்மானுவேல் கிளமெண்ட்கிப்சன் - ரூபவதி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட நாட்டுக்கல்பாளையம், காசிப்பட்டணம், தளவாய் பாளையம், வீரல்பட்டி, அம்மையகவுண்டனூர் ஆகிய கிராமங்களுக்காக, சதீஷ் மனநிலை சரியானதற்காக, பின்வாங்கிப்போன ஆனந்தராஜ் மீண்டும் மனந்திரும்பியதற்காக, ஷீலாவுக்கு நெஞ்சுவலி சுகமானதற்காக, எஸ்தருக்கு வாழ்வாதர உதவி கிடைத்ததற்காக துதிப்போம். ஜெபத்தாய் மனநிலை சுகமாக, லெட்சுமி இரத்தசோகை நோயிலிருந்து சுகம் பெற, பார்வதி மருமகள் மனநோயிலிருந்து சுகம் பெற, திருமுழுக்கு எடுக்கவிருக்கும் நான்கு பேர் கர்த்தருக்குள் வளர ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : ஸ்டீபன் செல்வகுமார்- கரோலின்**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட வாழைகொம்பு, புதுகாலனி, அம்பராம்பாளையம், சோமத்தூர், சித்தூர் ஆகிய கிராமங்களுக்காக, நற்செய்தி கேட்டு ஆலய ஆராதனையில் பங்கு கொள்ளும் சுப்பாத்தா, கனகா, மணிகண்டன், சுமதி, சிமியோன் ஆகியோருக்காக, பின்வாங்கிப்போன ராமகிருஷ்ணன், ரமேஷ் மீண்டும் ஆலய ஆராதனையில் பங்கு பெற்றதற்காக துதிப்போம். எய்ட்ஸ் நோயினால் பாதிக்கப்பட்டுள்ள மாசிலாமணி சுகம் பெற, தனபால், இன்பராஜ் ஆகியோருக்கு திருமணம் நடைபெற, ரமேஷ்- சுதா குடும்பத்தில் சமாதானம் கிடைக்க ஜெபிப்போம்.

## திருப்பூர் மாவட்டம்

**அருட்பணியாளர்: பாலசௌந்திரன்- மரியாள்**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட கு.க.பட்டி, பிச்சைகல்பட்டி, சின்னமருதூர், கம்பளியம்பட்டி, உப்புத்துறை ஆகிய கிராமங்களுக்காக, கிருபையம்மாள் செயலிழந்த இடது கால் சுகமானதற்காக, ரவி சாலை விபத்தில் பாதுகாக்கப்பட்டதற்காக துதிப்போம். முருகேஸ்வரி தோல்வியாதி சுகமாக ரவி ஒடிந்த எலும்பு சுகமாக பின்மாற்றத்தில் உள்ள ரூபி, தமிழ்செல்வி, கன்னியம்மாள், நகோமி ஆகியோர் மீண்டும் ஆலயம் வர ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : பால்துரை - ஜெயரூபி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட நாசிப்பாளையம், மூக்குத்தரிச்சாம்பாளையம், சாக்கரை வலசு, கிளாங்குண்டல் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட கணபதி, பிரியா, ஆனந்திக்காக, செல்லத்துரை மாரடைப்பு நோயிலிருந்து சுகம் பெற்றதற்காக துதிப்போம். சபைக்கு விரோதமாக செயல்படும் நடராஜ், நாச்சிமுத்து, செந்தில் இரட்சிக்கப்பட, திலகவதிக்கு குழந்தை பாக்கியம் கிடைக்க, புனிதாவுக்கு திருமண



தடைமாற, ஊழியர் மனைவிக்கு இளைப்பு நோய் சுகமாக, ஊழியர் குடும்பத்திற்கு தனிவீடு கட்டப்பட சபை பராமரிப்பு பணி நடக்க, பின்வாங்கிப் போனவர்கள் மீண்டும் சபைக்கு வர ஜெபிப்போம்.

**திங்கள்**

**சுயசார்புத் திருச்சபை**

**அருட்பணியாளர் : அருள்திரு. சாலமோன்ராஜ் - ஜெயக்கொடி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட செல்லப்பம்பாளையம், அத்தநாரிபாளையம், ரெட்டியார்ஊர், பருத்தியூர், ஆண்டியூர் ஆகிய கிராமங்களுக்காக, விபத்தில் சிக்கி சுயநினைவு இழந்த அருண்குமாருக்கு சுகம் கிடைத்தற்காக, சுலோக்ஷனாவுக்கு ஆண் குழந்தை கிடைத்ததற்காக, புதிதாக ஆலயம் வரும் இரவி, லெட்சுமி, பழனி, வீரா, விக்னேஷ் ஆகியோருக்காக, திருமுழுக்கு எடுத்த பதினோறு பேருக்காக, தினேஷ் திருமணம் ஆசீர்வதிக்கப்பட்டதற்காக துதிப்போம். விபத்தில் சிக்கி பாதிக்கப்பட்ட சேகர், முருகன் உயிர்பிழைக்கவும், அபிராமி, கோபால், மணி, பிரசாந்த் திருமண தடைகள் நீங்கி, சம்பத், வெள்ளியங்கிரி, பழனிச்சாமி, மணியன், கோபாலகிருஷ்ணன், தாமரை, ராமன், திருமாத்தாள் ஆகியோர் இரட்சிக்கப்பட, பிளஸ்சிக்கு சுகப்பிரசவம் கிடைக்க ஜெபிப்போம்

## திருச்சி மாவட்டம்

**அருட்பணியாளர் : S.ஜெயகுமார் - மரிய செல்வம்**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட உப்பிலியாபுரம், சோபனபுரம், மாராடி, வெங்கடாசலபுரம், கிருஷ்ணாபுரம், கோட்டப்பாளையம் ஆகிய கிராமங்களுக்காக, ராஜூக்கு ஏற்ற மணமகள் கிடைத்தற்காக, மணி, நவீன், செந்தில், சின்னபொன்னு, ராமய்யா ஆகியோருக்கு நற்செய்தி அறிவிக்கப்பட்டதற்காக துதிப்போம். ஜாய் மிராக்கிள் லதா திருமணம் ஆசீர்வாதமாக நடைபெற, ஜெயசெல்லத்திற்கு சுகப்பிரசவம் கிடைக்க, சின்னப்பொன்னு- கருப்பணன் குடும்பம் இரட்சிக்கப்பட, சேகர், பானுமதி, தேவசகாயம், சகாய ரஞ்சினி ஆகியோருக்கு குழந்தை பாக்கியம் கிடைக்க, அசோக் மனநோயிலிருந்து சுகமாக ஜெபிப்போம்.

## மதுரை மாவட்டம்

**அருட்பணியாளர் : ஏனோக் - பாலின் சௌந்தரியா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட வாகைக்குளம், முண்டுவேலம்பட்டி, வலாங்காங்குளம் ஆகிய கிராமங்களுக்காக, பவுல், கார்த்திகா, ஜெஸ்வின் விபத்திலிருந்து பாதுகாக்கப்பட்டதற்காக, புதிதாக ஆலயம் வந்த சுகந்தி, சுஜி ஆகியோருக்காக துதிப்போம். புதுவருட தரிசனம் நிறைவேற, சிறுவர், வாலிபர் ஊழியம் தடையின்றி நடைபெற, அருட்பணியாளர்கள் எழும்ப ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : M. கார்த்தி - ரீஜா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட பரம்பட்டி, சென்னம்பட்டி, ரெட்டியப்பட்டி, ஆண்டிப்பட்டி ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட கர்ணன், தனலட்சுமி, பொம்மாயம்மா, மேகலா, வர்ஷினி, கன்சிகா, பாப்பா, பஞ்சுகிளி ஆகியோருக்காக, தேடாம்மா குடும்ப பிரச்சனை தீர்ந்து சமாதானம் கிடைத்தற்காக துதிப்போம். பின் வாங்கிப்போன சிம்பு, அலெக்ஸ் மீண்டும் ஆலயம் வர ஜெபிப்போம்

**அருட்பணியாளர் : A. ஜார்ஜ் இம்மானுவேல் - முருகம்மாள்**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட இந்திராநகர், வாகைக்குளம் பிரிவு, தங்களாச்சேரி, திருமங்கலம் பனைமரம் ஸ்டாப் ஆகிய கிராமங்களுக்காக, நற்செய்தி கேட்டு திருச்சபைக்கு வருகின்ற சத்யா, கனிஷ்கா, ஜனா, சுவாதி, சுஷ்மிதா, தர்ஷனா, தர்ஷிகா, பூங்கொடி, கிஷோர், ஜோதிகா, வடிவேலுக்காக, ஜெயந்தி, வெண்ணிலா திரும்ப ஆலயம் வருவதற்காக, கருப்பையாவுக்கு வேலை கிடைத்தற்காக, மாரி குடிப்பழக்கத்திலிருந்து விடுதலை பெற்றதற்காக துதிப்போம். புதிதாக ஆலயம் வரும் வைரவன் விக்கிரக ஆராதனையிலிருந்து விடுதலை பெற, பாப்பாத்தியம்மா புதிதாக இடம் வாங்கி வீடு கட்ட, பின்மாற்றத்திலுள்ள தாழையம்மா திரும்ப ஆலயம் வர, சுபிக்ஷன் (2வயது) பேச ஜெபிப்போம்.

**சுயசார்புத் திருச்சபை**

**அருட்பணியாளர் : ஜோயல் அற்புதராஜ் - சுவேதா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட ஜோதிமாணிக்கம், கொடிக்குளம் ஆகிய கிராமங்களுக்காக, திருச்சபை போதகர் வீடு அர்ப்பணிக்கப்பட்டதற்காக, ஆபிரகாம் பாண்டி மகள் திருமண தேவைகள் சந்திக்கப்பட்டதற்காக துதிப்போம். பிரபு திருமண தடை நீங்க, மேகலா குடும்ப பிரச்சனை தீர, சிவரஞ்சினி, கணேசன் மனம் திரும்பி ஆலயம் வர ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : ராஜா - அன்னாள்**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட வெங்கடாசலபுரம், குச்சம்பட்டி, தெப்பம், நல்லமரம் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட பழனிச்சாமி, மாரீஸ்வரி, பாலமுருகன், மீனா, அமிர்தம் ஆகியோருக்காக துதிப்போம். பின்வாங்கிப்போனவர்கள் மனந்திரும்ப, ஊழியர் குடியிருப்பு மராமத்து பணி செய்ய தேவைகள் சந்திக்கப்படவும் ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : ராஜேஷ் ஜாஷ்வா - லாவண்யா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட கரடிக்கல், மொட்டப்பாறை, குன்னணம்பட்டி ஆகிய கிராமங்களுக்காக, கார்த்திக், பிரபு ஆண்டவரை ஏற்றுக்கொண்டதற்காக, நல்லவேலை கிடைத்தற்காக, நற்செய்தி கேட்ட மகேஷ்கண்ணன் மனம் திரும்பி ஆண்டவரை அறிக்கை செய்ததற்காக துதிப்போம். சுவிசேஷம் கேட்ட செல்வமணி, கருணன், ராம் பிரியா, பிரேமலதா, முகுந்தன், வைரக்காளம்மாள், ஆதிலட்சுமி, தர்சினி, ஈஸ்வரபெருமாள், பாண்டி கருப்பு, பெரிய கருப்பன், பிரியதர்சினி ஆகியோர் இரட்சிக்கப்பட, மகேஷ்கண்ணன் உடல்பெலவீனம் மாற, துர்கா மனம் திரும்பி ஆண்டவரை ஏற்றுக்கொள்ள ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : ஜெயராமன் - ஜீவா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட அரசப்பட்டி, திருமால், ஆண்டிப்பட்டி ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக சபைக்கு வரும் மூவேந்திரன், பிரபாகரன், துர்கா, பிரியாவுக்காக, ஞானம்மாள் மகனுக்கு தேவன் கொடுத்த சுகத்திற்காக, பழனியாண்டி ஆலயம் வருவதற்காக துதிப்போம். புதிய ஆத்துமாக்கள் சபைக்கு வர, சிறுவர் ஊழியம் மூலமாய் பிள்ளைகளின் குடும்பங்கள் இரட்சிக்கப்பட, பழனியாண்டி, மாரியப்பன் குடும்பங்கள் இரட்சிக்கப்பட, திவ்யா குடும்பத்தில் சமாதானம் கிடைக்க ஜெபிப்போம்.

**சுயசார்புத் திருச்சபை** **அருட்பணியாளர் : M. அகஸ்டின் - ஜோஸ்பின்**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட செல்லம்பட்டி, காந்திநகர், சங்கம்பட்டி, வாலாந்தூர் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட அனுஷா, கொடி, ஒச்சம்மாவுக்காக, நிஷா, பானு ஆகியோர் மீண்டும் ஆலயம் வந்ததற்காக துதிப்போம். கோபிக்கு குழந்தை பாக்கியம் கிடைக்க. கவிதா, பொன்னுச்சாமி குடும்பமாக ஆலயம் வர ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : P. சத்தியநாதன் - கிறிஸ்டி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட மொண்டிக்குண்டு, மலைச்சாமிபுரம் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக சபைக்கு வந்த T.R. ராஜேந்திரனுக்காக, சபைக்கு புதிதாக ஒலிபெருக்கி (P.A system) வாங்கியதற்காக துதிப்போம். ஜான்சன் நிலப்பிரச்சனை நீங்க, டேவிட்டுக்கு அரசு வேலை கிடைக்க, அம்சு பழனிச்சாமி – கடன் பிரச்சனை மாற, ஜோனத்தான் ராஜாவுக்கு வேலை கிடைக்க, குடும்பம் ஆசீர்வதிக்கப்பட ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : எஸ்தர் செல்வராணி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட லிங்கப்பநாயக்கனூர், கொப்பிலிப்பட்டி, திம்மநத்தம் ஆகிய கிராமங்களுக்காக, பஞ்சாயத்து தலைவர் மூலமாய் இருபது நாற்காலிகள் கிடைத்ததற்காக, பின் வாங்கிப்போன கருப்பாயி குடும்பமாக ஆலயம் வந்ததற்காக துதிப்போம். திவ்யா பிசாசின் பிடியிலிருந்து விடுபட, பூசாரி மாயி குடும்பம் இரட்சிக்கப்பட, காசிமாயன்–ஆர்த்தி இணைந்து வாழ ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : அருள்திரு. மூவேந்திரன் - விஜயா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட அயோத்திபட்டி, வகுரணி ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக சுவிசேஷம் கேட்ட புஷ்பம், ராஜா, மகேஸ்வரிக்காக, இந்திராவுக்காக, ராஜன் விபத்திலிருந்து பாதுகாக்கப்பட்டதற்காக, ஜீவாவுக்கு கிடைத்த ஆண் குழந்தைக்காக, அமுதா, அனிதாவுக்கு கிடைத்த குழந்தை பாக்கியத்திற்காக துதிப்போம். தகப்பனை இழந்த முருகேஷ்வரிக்கு ஆறுதல் கிடைக்க. சித்ரா, கவிதா, கருத்தையா, கமலக்கண்ணன், மகராஜன், ரமேஷ், முத்துப்பாண்டி ஆகியோர் இரட்சிக்கப்பட, சரஸ்வதி நிலப்பிரச்சனை தீர, அமுதாவுக்கு சுகப்பிரசவம் கிடைக்க, ராமாயிக்கு நெஞ்சுவலி தீர ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : பால்ராஜ் - ஏஞ்சல்**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட கூத்தியார்குண்டு, கருவேலம்பட்டி, கப்பலூர் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட நாகேஸ்வரி, குமரேசன், ராஜ், தானியா,



பாண்டீஸ்வரி, ரமேஷ், ருக்குமணி ஆகியோருக்காக, ராஜகுமாரி சகோதரியின் மருமகன் குடிப்பழக்கத்திலிருந்து விடுதலை பெற்றதற்காக துதிப்போம். ஆலய வளாகத்தில் உள்ள பள்ளங்கள் நிரப்பப்பட, போர்வெல் சரி செய்யப்பட, அதற்குரிய தேவைகள் சந்திக்கப்பட ஜெபிப்போம்.

## செவ்வாய்

**அருட்பணியாளர் : ஜெகன் - திவ்யா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட உச்சப்பட்டி, முனியாண்டிபுரம், கப்பலூர் காலனி ஆகிய கிராமங்களுக்காக, நற்செய்தி கேட்ட அஜீத்குமார், வசந்தபாலன், சக்திவேல், மணிமுத்து, முத்துச்செல்வி, சரண்யா, சித்ரா, கார்த்திகா, மதுசூதனன் ஆகியோருக்காக, சங்கீதாவுக்கு குழந்தை பாக்கியம் கிடைத்தற்காக துதிப்போம். ஜெர்சலின் தைராய்டு நோயிலிருந்து சுகம் பெற, நற்செய்தி கேட்டவர்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : ஞானமுத்து - குமுதவள்ளி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட உ.புதுக்கோட்டை, துரைச்சாமிபுரம் ஆகிய கிராமங்களுக்காக,சுவிசேஷம் கேட்ட ஈஸ்வரன், பேச்சியம்மாள், பாக்கியம், அழகுத்தாய், ராமாயம்மாள், செல்லம்மா, பொன்னையனுக்காக, நீண்ட நாட்களுக்கு பின்பு ஆலய ஆராதனையில் பங்கு பெற்ற முருகம்மாள், மாயன் ஆகியோருக்காக, புதிதாக சபைக்கு வந்த நித்தீஷ், பிரவீனுக்காக துதிப்போம். நான்சி, வின்சி, சாதனா கர்த்தருக்குள் வளர, தங்கவேல் குடும்பமாக ஆலய ஆராதனையில் பங்கு பெற, இராமலிங்கம் குடிப்பழக்கம் மாற, வெள்ளையனுக்கு ஏற்ற வாழ்க்கை துணை கிடைக்க, சிறுவர்களுக்கான சிறப்பு நிகழ்ச்சி நடத்தப்பட ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : டி.எஸ். தங்கராஜ் - செல்வமணி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட பாலமேடு, மேலச்சின்னனம்பட்டி, கீழச்சின்னனம்பட்டி ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக சுவிசேஷம் கேட்ட ராணி குடும்பம், திருத்தணி, அக்கினிராஜ், தருண், விஷ்ணு குடும்பம், அக்கினிகுமார் ஆகியோருக்காக துதிப்போம். பாலன் குடும்பக் கடன் தீர, நாகராஜ் தொழில் விருத்தி அடைய, பரமசிவம், அபிராமி, ஹரிஹரன், தமிழ்மணி, சுதர்சன், அபர்ணா, சந்தோஷ், அட்சயா, காயத்திரி ஆகியோர் இரட்சிக்கப்பட ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : ஜஸ்டின் சாமுவேல் - சுபா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட அச்சம்பத்து, புதுக்குளம் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக சுவிசேஷம் கேட்ட கண்ணன், ஈஸ்வரி, சரவணக்குமார், வெங்கடேஷ் ஆகியோருக்காக, பொன்ராஜ், சுபன் குடும்பத்தில் கர்த்தர் கொடுத்த சமாதானத்திற்காக, ஈஸ்வரி ஞானஸ்நானத்திற்கு ஒப்புக் கொடுத்ததற்காக துதிப்போம். பாண்டி மனம் திரும்ப, கண்ணன் விசுவாசத்தில் பெலப்பட, சாரதா, ஷீலா, கீதா, ராஜேஷ் சபை ஆராதனையில் பங்குபெற ஜெபிப்போம்.

**சுயசார்புத் திருச்சபை** **அருட்பணியாளர் : பெஞ்சமின் - எலிசபெத்**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட பெருங்காமநல்லூர், நரியம்பட்டி, காளப்பன்பட்டி ஆகிய கிராமங்களுக்காக, முனியாண்டி குடும்பத்தார் ஆலய ஆராதனையில் பங்கு பெற்றதற்காக, அன்னம்மாளின் இருதய பெலவீனம் நீங்கியதற்காக துதிப்போம். காசி, கவிதா, பாண்டியம்மாள் ஆகியோர் மீண்டும் ஆலய ஆராதனையில் பங்கு பெறவும், ஆலயம் கட்ட தேவைகள் சந்திக்கப்படவும் ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : வயநாட்டு முத்து - கனியமுது**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட சொரிக்காம்பட்டி, சமத்துவபுரம் ஆகிய கிராமங்களுக்காக, சுவிசேஷம் கேட்டு சபைக்கு வந்த தங்கப்பாண்டி, ஈஸ்வரி, சிவப்பிரியா, அமராவதிக்காக, சபைக்கு உதவி செய்த மக்களுக்காக துதிப்போம். குபேந்திரனுக்கு நல்ல வேலை கிடைக்க, தங்கபாண்டி உடல் ஆரோக்கியத்திற்காக, அமராவதிக்கு நிரந்தர வேலை கிடைக்க ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : திரு. J. ஜெயகுமார் - கனி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட வடபழஞ்சி, சாக்கிலிப்பட்டி, பல்கலைநகர், அடைக்கம்பட்டி ஆகிய கிராமங்களுக்காக, நற்செய்தி கேட்டு சபைக்கு வந்த பேச்சி, ரம்யா, மீனா, ராஜா, அம்பிகாவுக்காக ஞாயிறு ஓய்வுநாள் பிள்ளைகள் கர்த்தருடைய வார்த்தையில் வளர்ந்து வருவதற்காக, வாலிபர்கள் கர்த்தருடைய ஊழியத்திற்கு ஒப்புக்கொடுத்து வருவதற்காக, விசுவாசிகள் கிராம ஊழியத்தில் கலந்து கொள்வதற்காக துதிப்போம். பாண்டி, ரேவதி,

சரவணன், சண்முகம் ஆலயம் வர, பாரதி, தனம், பிரேமா, தினேஷ், ஜெகதீஷ், அருண் ஆகாஷ், அஸ்வின், முகிலன், மீனாட்சி சுந்தரம், அர்ச்சனா, கௌசிகா, மீனாவள்ளி இரட்சிக்கப்பட ஜெபிப்போம்.

**சுயசார்புத் திருச்சபை** **அருட்பணியாளர் : பிலிப் முருகன் - அனிதா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட குளத்துப்பட்டி, வெள்ளமலைபட்டி ஆகிய கிராமங்களுக்காக, கிறிஸ்துமஸ் ஆராதனைக்கு வந்திருந்து நற்செய்தி கேட்டவர்களுக்காக துதிப்போம். கிறிஸ்துமஸ்ஆராதனையில் கலந்து கொண்டவர்கள் இரட்சிக்கப்பட, ஆலயத்தைச் சுற்றிலும் சுவர் கட்டப்பட, ஊழியரின் மகன் படிப்பு தேவைகள் சந்திக்கப்பட ஜெபிப்போம்.

**தேனி மாவட்டம்** **அருட்பணியாளர் : திரு. தேவதாஸ் - பிலோமினா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட பாலகோம்பை, ராயவேலூர், கென்னடியூர், வண்டியூர், கரட்டுப்பட்டி, தெப்பம்பட்டி, கொழிஞ்சிப்பட்டி, ராமகிருஷ்ணாபுரம் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட ராஜேஷ், வேல்முருகன், அஜித், மகாராஜா, சண்முகவேல் ஆகியோருக்காக துதிப்போம். மகாராஜா புற்று நோயிலிருந்து சுகம் பெற, இந்துமதி, ஸ்ரீமதி ஆகியோருக்கு குழந்தை பாக்கியம் கிடைக்க ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : திரு. டேனியல் - ஜனனி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட மேல்மங்கலம், அழகர்நாயக்கன்பட்டி, ஜெயமங்கலம், வடுகப்பட்டி ஆகிய கிராமங்களுக்காக, ஊழியர் மனைவி ஜனனிக்கு பெண் குழந்தை கொடுத்ததற்காக, ரிச்சர்ட் குடும்பத்தில் தேவன் சமாதானம் கொடுத்ததற்காக, ராஜேஷ்க்கு வாழ்வாதார வேலை கிடைத்ததற்காக துதிப்போம். அன்பரசன் குடும்ப பிரச்சனை தீர, அவர் சகோதரிக்கு இரட்சிக்கப்பட்ட மணமகன் கிடைக்க, சாந்தகுமாருக்கு மூளையில் உள்ள பிரச்சனை மாற, பிரியாவின் தந்தை குடிப்பழக்கத்திலிருந்து விடுதலையடைய, வாஞ்சிநாதன் குடும்ப கடன் தீர ஜெபிப்போம்.

**அருட்பணியாளர் : G. நாதன் - மேகலா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட பொன்னாம்மாள்பட்டி, முத்துநாயக்கன்பட்டி, கண்டமனூர், தேக்கம்பட்டி, அடைக்கம்பட்டி, டி.மீனாட்சிபுரம் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட இந்திரா, செல்லத்துரை, சாந்தி, ஜெல்சியா ஆகியோருக்காக, புதிதாக ஆலயம் வரும் சௌந்தர்யா, புவனேஸ்வரி, செல்லத்துரை, செல்லம், பாலு, கீர்த்தனா ஆகியோருக்காக, லட்சுமிக்கு கர்த்தர் கொடுத்த கர்ப்பகனிக்காக துதிப்போம். சௌந்தர்யா விவசாயம் செழிக்க, புவனேஸ்வரிக்கு இரட்சிக்கப்பட்ட மணமகன் கிடைக்க, செல்வம் இரட்சிக்கப்பட, ஆலயம் கட்டப்பட ஜெபிப்போம்.

**விருதுநகர் மாவட்டம்** **அருட்பணியாளர் : அருள்திரு. சாமுவேல்கணேசன்- விஜயா**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட தண்டியனேந்தல், கல்குறிச்சி, வக்கனாங்குண்டு, தோணுகால் ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட தினேஷ், காளியப்பன், முத்துலெட்சுமி, முருகன், பாண்டி, செல்வி, சிவா, கந்தன் ஆகியோருக்காக, புதிதாக ஆலயம் வரும் காவியா, விஸ்வா, சஞ்சிதா, லட்சுமி, கருப்புச்சாமி ஆகியோருக்காக, பாண்டிமீனா, செல்வி, லட்சுமி ஆகியோருக்கு கர்த்தர் கொடுத்த ஆண் குழந்தைக்காக துதிப்போம். வசந்த், ஜீவா, முத்துக்குமார், செல்வி, விஜி ஆகியோர் குடும்பமாக ஆலய ஆராதனையில் பங்குபெற ஜெபிப்போம்.

**தென்காசி மாவட்டம்** **அருட்பணியாளர்கள் : ஸ்டான்லி ஜோன்ஸ், மோகன்**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட மருதங்கிணறு, மேலசிவகாமிபுரம், திருமலாபுரம், மகேந்திரவாடி, கெச்சிலாபுரம், வடக்கு காலங்கரைப்பட்டி ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட ராஜேஷ், கருப்புசாமி, கமலேஷ், அபி ஆகியோருக்காக, புதிதாக ஆலயம் வரும் வடிவம்மா, ராமலெட்சுமி, மாரியம்மா ஆகியோருக்காக, பெரியதாய் வீடு கட்டப்பட்டதற்காக துதிப்போம். கமலா மகள் கர்ப்பப்பை பிரச்சனை தீர, ஜானகிக்கு சமாதானம், சந்தோஷம், நிம்மதி கிடைக்க ஜெபிப்போம்.

**தூத்துக்குடி மாவட்டம்** **அருட்பணியாளர் : M.M. சாலமோன் - ஜெஸி**

நற்செய்தி அறிவிக்கப்பட்ட கீழசெக்காரக்குடி, மேலசெக்காரக்குடி ஆகிய கிராமங்களுக்காக, புதிதாக நற்செய்தி கேட்ட வெள்ளைச்சாமி, ஜெயராஜ், ரமேஷ், பண்டாரம், முருகன், ஆதி, மூலப்பெருமாள் ஆகியோருக்காக துதிப்போம். திருமுழுக்கு எடுத்த ஆகாச வீரபாண்டி கர்த்தருக்குள் வளர ஜெபிப்போம்.





**தரிசனம் பரப்புவோர்**

புதிய தாங்குவோர் கிடைக்க, புதிய ஜெபக்குழுக்கள் ஆரம்பிக்கப்பட, மண்டல ஒருங்கிணைப்பாளர்கள் அருள்திரு.P. பீட்டர், திரு.T. விஜயசங்கர், திரு.R. பாலசுப்பிரமணியன், ஊழியர்கள் திருமதி. ஹெர்சி லீதியாள் மாசில்லாமணி, திருமதி.C. மேபல்ராணி, திரு.S. ரிவிங்டன் ஜெபராஜ், திருமதி. இந்திராணி கில்பர்ட், திருமதி. தீபா மோசஸ், திருமதி.J. பிளஸ்ஸி, திரு.செல்வராஜ், திருமதி. ராணி வின்செண்ட், திரு.K. பால்ராஜ், திரு.S. சம்பத்குமார், திரு.S. டேவிட் சாலமோன், திரு.A. தம்புராஜ், திரு.P. மரியானந்தன் மாற்கு, திரு.J. ஜேக்கப் ராஜதுரை, திரு.F. ஹென்றி ஜார்ஜ், திருமதி.A. சம்மனசு மேரி, திரு.A. ஜோசப் ஆசீர்வாதம், அருள்திரு.K டேனியல் தங்ககோட்டை, திரு.A. மகுடீஸ்வரன், திரு.C. சாமுவேல், திரு. J.P. ரவிக்குமார், திரு.J. சாலமோன் இன்பராஜ், திருமதி. பியூலா திருவாசகி, திரு.S. கிருஷ்ணமூர்த்தி, திருமதி.V. சுவேகா ஆகியோரின் பயணப் பாதுகாவலுக்காக, குடும்பங்களுக்காக ஜெபிப்போம்.

**பதிவு அலுவலகம்**

அருள்திரு.V. இம்மானுவேல் பாண்டி (தமிழக பணித்தள ஒருங்கிணைப்பாளர்), திரு.C. ராஜரத்தினம் (தமிழக பணித்தள துணை ஒருங்கிணைப்பாளர்), அருள்திரு.D. திருஞானம் (வடஇந்தியப் பணித்தள ஒருங்கிணைப்பாளர்) ஆகியோருக்காக ஜெபிப்போம்.

**மொழிபெயர்ப்புப் பணி**

மொழி பெயர்ப்பாளர் திருமதி ஷீலா நாகராஜனுக்குத் தேவையான ஞானம் கிடைக்க, மொழிப்பெயர்ப்பில் உதவும் சகோ.கசியாவுக்காக, மொழி பெயர்ப்பு பணி நிறைவடைந்த புதிய ஏற்பாட்டு புத்தகங்களை வாசிக்கிற கோண்டி விசுவாசிகளின் ஆலோசனைகள் விரைவில் கிடைக்க, இறுதி ஆய்வுக்கு சென்றுள்ள மொழி பெயர்ப்பு செய்யப்பட்ட புதிய ஏற்பாட்டு புத்தகங்கள் விரைவில் ஆய்வு முடிந்து, அச்சில் ஏற்றப்பட, ஆரம்பிக்கப்பட்டுள்ள பழைய ஏற்பாட்டு மொழி பெயர்ப்புக்கு உதவி செய்ய கோண்டி வாலிபர்கள் கிடைக்க ஜெபிப்போம்.

**நிர்வாக அலுவலகம்**

திருமதி. ரூபி பிரான்சிசுக்கு கிடைத்த ஆண் குழந்தைக்காக துதிப்போம். இவ்வியக்கத்தை நடத்த தேவையான ஞானம், பெலன், வழிநடத்துதல், பிரயாணங்களுக்காக பொதுச்சேவகர் அருள்திரு.அ. லெஸ்லி நாகராஜன், அருள்திரு. வெ. ஜான், அருள்திரு.G. பொன்னுராஜ், அருள்திரு.இரா. ஜெயசீலன், திரு. ஜெயசிங். திரு.A. சாம் டென்சிங், திருமதி. சுஜிதா ஆலிவர், திருமதி.E. நந்தினி, சகோதரி.J. ஜாய்ஸ் ஜெயமேரி, ஓட்டுநர் திரு.Y. பிரான்சிஸ், திரு.ஆஷிஸ், திருமதி.E.C. ஒமேகா கிறிஸ்டி, திரு. சாமுவேல் கிறிஸ்டோபர் ஆகியோருக்காக, சென்னை அலுவலகம் சிறப்புடன் செயல்பட, நிர்வாக அலுவலகம் கட்டுவதற்குத் தேவையான ரூபாய் இரண்டு கோடி சந்திக்கப்பட ஜெபிப்போம்.

**வளரும் விண்ணரசு**

**ICGM** வெளியிடும் பத்திரிக்கை பயனுள்ளதாகவும், எழுதுபவர்கள் தூய ஆவியானவரால் ஆளுகை செய்யப்படவும், புதிய புத்தகங்கள் அச்சிடப்படவும், ஆசிரியர் குழுவினரின் உழைப்பு மற்றும் குடும்ப நலனுக்காக ஜெபிப்போம்.

**நிர்வாகம்**

நிறுவனர் டாக்டர் **N.J.** ஞானையா, செயற்குழு உறுப்பினர்கள் திரு. திருநாவுக்கரசு, திரு. டேவிட் கோபாலகிருஷ்ணன், திரு. சாமுவேல் ஜெபராஜன், டாக்டர். காருண்யா சாமுவேல், டாக்டர் ஸ்டீபன், திரு. காபிரியேல், திரு. சங்கர் மற்றும் பொதுக்குழு உறுப்பினர்கள் ஆகியோரது குடும்பங்களுக்காக ஜெபிப்போம்.

**வளரும் விண்ணரசு சந்தாவைப் புதுப்பித்து**
**பத்திரிக்கை ஊழியம் சிறக்க உதவுங்கள்**

# சத்தீஷ்கர்

## வட இந்தியா
## மேற்கத்திய கோண்டுகள்

(சத்தீஸ்கர் மாநிலம்)

**திரு. சாது துக்கா -ரசாய் துக்கா**

சம்பத்தி பொட்டாய்க்கு தேவன் தந்த சுகப்பிரசவத்திற்காக துதிப்போம். சீத்தாராம் எழுந்து நடக்க, மங்கரு அரிப்பு நோயிலிருந்து சுகம் பெற, ரமோலியின் கணவர் இரட்சிக்கப்பட, ஆம்கான் பணித்தளத்தில் நற்செய்தி கேட்ட மக்கள் இயேசுவை ஏற்றுக்கொள்ள ஜெபிப்போம்.

**திரு. பூனுதுக்கா-புலேசர் துக்கா**

ஊழியத்தில் தேவன் தந்த வளர்ச்சிக்காக, தஸ்ரி வயிற்றுவலியிலிருந்து சுகமானதற்காக துதிப்போம். சிப்ரேல் சபையின் தேவைகள் சந்திக்கப்பட்டு ஆலயம் கட்டப்பட, சனோதி மனநோயிலிருந்து சுகம் பெற, சுக்கரோ தலை காயத்திலிருந்து சுகம் பெற ஜெபிப்போம்.

**சகோதரி. தன்பத்தி பொட்டாய்**

மொழிபெயர்ப்பு பணிகள் தடையின்றி நடைபெற்றதற்காக, கடந்த மாதம் யோவான் 3 –12 அதிகாரங்கள் சரிபார்க்கப்பட்டதற்காக துதிப்போம். சக்தி துக்காவின் பிரச்சனை நீங்கி ஆலயம் வர, தர்சிங் வாடே இரட்சிக்கப்பட, ரசியா வாடே கால்வலியிலிருந்து சுகமடைய, தன்பத்தி பொட்டாய்க்கு சுகப்பிரசவம் கிடைக்க ஜெபிப்போம்.

**சகோதரி. சுரேகா காவ்டே**

விசுவாசிகளின் ஆவிக்குரிய வளர்ச்சிக்காக துதிப்போம். தேவ்கான் கிராம விசுவாசிகள் ஆவிக்குரிய வாழ்வில் வளர, புதிய விசுவாசிகள் கடவுளுக்குள் நிலைத்து நிற்க, பின்மாற்றத்தில் உள்ளவர்கள் மீண்டும் ஆலயம் வர, ரெப்தேவ் காவ்டே விசுவாசத்தில் நிலைத்து நிற்க, ரூப்சிங் சர்க்கரை நோயிலிருந்து சுகம் பெற ஜெபிப்போம்.

**திரு. தேசிராம் வட்டே - ரானோ**

சோனி வட்டேய்க்கு தேவன் தந்த சுகத்திற்காக துதிப்போம். பாலி வட்டேய்க்கு தேவன் குழந்தை பாக்கியம் அருள, ஜமைய்டிக்கு இருக்கிற காயங்கள் சுகமாக, புதிய விசுவாசிகள் சந்திக்கப்பட ஜெபிப்போம்.

**திரு.சுக்மன் பொட்டாய்-சுக்மிபொட்டாய்**

புதிதாக ஆலயம் வரும் புல்சிங்கிற்காக, தேவனுடைய பாதுகாப்பிற்காக துதிப்போம். ஜெய்ட்பூரி கிராமத்தில் பணி செய்ய நல்ல ஊழியர்கள் கிடைக்க, அங்குள்ள விசுவாசிகள் விசுவாசத்தில் வளர, மயோனி மற்றும் நுரேடி ஆகியோர் வயிற்றுவலியிலிருந்து சுகம் பெற, சந்து முதுகுவலியிலிருந்து சுகம் பெற ஜெபிப்போம்.

**சகோ. கஸ்னி துக்கா & சகோ. ரஸ்னி துக்கா**

புதிதாக ஆலயம் வரும் 27 சிறுபிள்ளைகளுக்காக துதிப்போம். விசுவாசிகளுக்கு விரோதமாக செயல்படும் சாமு, அன்து, லகுரு, கியர்சிங், சோனதார், சாய்சு ஆகியோர் மனந்திரும்ப, ராம்தேர் சாலேம் காச நோயிலிருந்து சுகம் பெற, சந்து – மங்கலி துக்கா தம்பதியிருக்கு தேவன் குழந்தை பாக்கியம் அருள, சம்லால் சலாம், சாமு, ரகு, பய்ச்சு ஆகியோர் குடிப்பழக்கத்திலிருந்து விடுதலை பெற, பயிடா கிராமத்தில் ஊழியம் ஆரம்பிக்கப்பட ஜெபிப்போம்.

**சகோ. ரஸ்னி துக்கா**

ஊழியரை தேவன் விபத்திலிருந்து பாதுகாத்ததற்காக, சிதாய் சலேமுக்கு நடைபெற்ற ஆபரேஷனுக்காக, கடந்த மாதத்தில் நடைபெற்ற எல்லாவித நிகழ்ச்சிகளின் தேவைகளை தேவன் சந்தித்ததற்காக துதிப்போம். ஊழியரின் திருமணத்திற்காக, தேவைகள் சந்திக்கப்பட, சீத்தாய், சுக்ராம், ரகு ஆகியோருக்கு நிறைவான சுகம் கிடைக்க ஜெபிப்போம்.





**திரு. சன்னுதுக்கா**

ரமோடி கருங்கா உடல்வலியிலிருந்து சுகம் பெற்றதற்காக, ஊழியரையும், விசுவாசிகளையும் தேவன் பாதுகாத்ததற்காக துதிப்போம். பந்தசலாம் கால்வலியிலிருந்து சுகம் பெற, சோபைய் கோரம் மனநோயிலிருந்து சுகம் பெற, புதிதாய் ஆலயம் வரும் சியா மற்றும் மங்கா சாலேம் இரட்சிக்கப்பட ஜெபிப்போம்.

**திரு. தஸ்ருராம் பொட்டாய்-ஜெய்மதி**

புதிய நபர்களுக்கு நற்செய்தி அறிவிக்கப்பட்டதற்காக, கிறிஸ்துமஸ் கூட்டங்களில் கலந்துகொண்டு நற்செய்தி கேட்ட நபர்களுக்காக துதிப்போம். அஜய் மற்றும் சம்பந்தி இருவரும் ஆவிக்குரிய வாழ்வில் வளர, மங்கய் பொடாய் குடும்பத்திற்கு தேவ ஆறுதல் கிடைக்க, ராசு வட்டே மனநோயிலிருந்து சுகம் பெற, ரம்பத்தி தொண்டை வலியிலிருந்து சுகம் பெற, பல்தேவ பொட்டாய் கண்நோயிலிருந்து சுகம் பெற ஜெபிப்போம்.

**திரு.பஜ்நாத் சலாம்-சொனாரி சலாம்**

கரியபால் பணித்தள விசுவாசிகள் விசுவாசத்தில் வளர, சன்லி நகர் கிராம மக்களுக்காக, தன்லா தொடர்ந்து தேவனை பின்பற்ற ஜெபிப்போம்.

**திரு.லட்சு கருங்கா-புல்தாய்**

சந்தீப் குமாரின் உடைந்த கை சுகமானதற்காக துதிப்போம். பாசு வாய் பேச, சாய்சு தொடர் இருமலிலிருந்து சுகம் பெற, சங்கீதா நல்ல முறையில் நடக்க, போர்பால், கோரா, கோட்கான் கிராம விசுவாசிகள் ஆவிக்குரிய வாழ்வில் வளர ஜெபிப்போம்.

**திரு. மங்லு மாத்லாம் -சுசீலா**

சியனார், பாட்பால் பணித்தள விசுவாசிகள் தேவனுக்குள் வளர, சிராணி நீண்ட நாள் வயிற்றுவலியிலிருந்து சுகம் பெற, சாந்தி உதிரபோக்கு நோயிலிருந்து சுகம் பெற, சந்ரியின் குடும்பத்தில் தேவசமாதானம் கிடைக்க ஜெபிப்போம்.

**திரு. மான்சிங் கச்லாம்**

பஜ்னி பொடாய் உடல்வலியிலிருந்து சுகமடைய, மாங்கேய் கோடா காதுகள் நல்ல முறையில் கேட்க, சம்பந்தி பொட்டாய் முடக்குவாத நோயிலிருந்து சுகம் பெற, கோங்லா விசுவாசிகள் விசுவாசத்தில் வளர, சுனிதா கச்லாம் அவர்களின் பாடுகள் நீங்க ஜெபிப்போம்.

**செல்வி. ரெய்னி வட்டே**

சுகே பொட்டாய் வயிற்றுவலியிலிருந்து சுகம் பெற்றதற்காக, மனோதி பொட்டாய்க்கு தேவன் தந்த சுகப்பிரசவத்திற்காக துதிப்போம். ரானோ பொட்டாய் – குப்சி பொட்டாய்க்கு குழந்தை பாக்கியம் கிடைக்க, மங்தே பொடாய் நீண்ட நாள் வயிற்றுவலியிலிருந்து சுகம் பெற, புடே பொட்டாய் புற்று நோயிலிருந்து சுகம் பெற ஜெபிப்போம்.

**திரு. ராமபொரேஷ்**

தேவன் தந்த பாதுகாப்பிற்காக துதிப்போம். தனுவி விசுவாசத்தில் வளர, லாக்கி சுகமடைய ஜெபிப்போம்.

**திரு.சந்து சலாம்**

கங்காபதி கால்வலியிலிருந்து சுகமடைய, ரமேஷ் – சுலோன் தம்பதியருக்கு குழந்தை பாக்கியம் கிடைக்க, பஜ்னி விக்கி கண் நோயிலிருந்து சுகமடைய, ஊழியருக்கு சுகம் மற்றும் ஞானம் கிடைக்க ஜெபிப்போம்.

**திரு. கசியா துக்கா-ரூப்பாய்**

புதிதாக ஆலயம் வரும் 9 நபர்களுக்காக, பாம்லெஸ்வேரி இருதய வியாதியிலிருந்து சுகமானதற்காக துதிப்போம். லச்சோந்தி கழுத்து வலியிலிருந்து சுகமடைய, கோஸ்ரி கை வலியிலிருந்து சுகமாக, சாந்தா மேடம் கிராம விசுவாசிகள் எதிர்ப்பாளர்களிடம் இருந்து பாதுகாக்கப்பட, கசியா துக்கா குடும்பத்திற்காக, ஊழியங்களுக்காக ஜெபிப்போம்.

**திரு.ஜகுநாத் குமிடி**

தா்மு புற்று நோயிலிருந்து சுகம் பெற்றதற்காக, சத்ராம் குமிட்டி மனநோயிலிருந்து சுகமானதற்காக, அனுசுயா துக்கா வயிற்றுவலியிலிருந்து சுகமானதற்காக துதிப்போம். பிரம்பதி உசேன்தி முதுகுவலி ஆபரேஷன் இல்லாமல் சுகமடைய, ராய்சிங், நிக்கிடா, ரேஷ்மா ஆகியோருக்கு இருக்கிற காயங்கள் சுகமடைய, ஊழியருக்கு தேவஞானம் கிடைக்க ஜெபிப்போம்.

**செல்வி. கோத்தாய் பொட்டாய்**

ராஜ்குமாருக்கு தேவன் தந்த சுகத்திற்காக துதிப்போம். பரசுகான் கிராம விசுவாசிகளின் ஆவிக்குரிய வளர்ச்சிக்காக, சிறுகுழந்தை பிரேமின் வளர்ச்சிக்காக ஜெபிப்போம்.

**செல்வி. மனிஷா காவ்டே**

தேவன் தந்த விசுவாச வாழ்விற்காக, புதிய விசுவாசிகள் ஆலயம் வருகிறதற்காக துதிப்போம். ராஜிவ் ஆவிக்குரிய வளர்ச்சிக்காக மக்கபேடா பணித்தள மக்கள் இயேசுவை ஏற்றுக்கொள்ள, சியம்பாலி மனநோயிலிருந்து சுகமடைய ஜெபிப்போம்.

**திரு. சொகாய் கருங்கா**

புதிதாய் ஆலயம் வரும் பாசுக்காக, விசுவாசிகளில் அனேகர் சுகம் பெற்றதற்காக துதிப்போம். பின்மாற்றத்திலிருக்கும் சுகு மற்றும் குடும்பத்தினர் மீண்டும் ஆலயம் வர, ரஜினியின்குழந்தை இறப்பினால் கவலைப்படும் குடும்பத்திற்கு தேவ ஆறுதல் கிடைக்க, ஊழியருக்கு தேவ ஞானம் கிடைக்க ஜெபிப்போம்.

**வெள்ளி**

**திரு. சுக்தேவ் குமிட்டி**

புதிதாக நற்செய்தி கேட்ட 4 நபர்களுக்காக, ஊழியருக்கு தேவன் தந்த பாதுகாப்பிற்காக துதிப்போம். நற்செய்தி கேட்ட சஞ்சய், லலித், ரமேஷ் மற்றும் ஜெயராம் ஆகியோரின் இரட்சிப்பிற்காக, சுக்தேவ் குடிவி ஆவிக்குரிய வாழ்வில் வளர ஜெபிப்போம்.

**திரு. சுக்ராம் சலாம்**

லட்சந்தி துக்கா மலேரியா காய்ச்சலிலிருந்து சுகமானதற்காக, சுக்மதி விரல்களில் உள்ள வலி சுகமானதற்காக துதிப்போம். மங்கோதி மனநோயிலிருந்து சுகம் பெற, கோர்கோன் கிராமத்தில் சபை கட்டப்பட, குட்ரபாரா கிராமத்தில் உள்ள வாலிபர்கள் இரட்சிக்கப்பட, ருகோதி, ஜெய்மதி ஆகியோர் விசுவாசத்தில் வளர ஜெபிப்போம்.

**திரு. சன்னுராம் குமிடி**

சுக்டே சாலேம் புதிதாய் ஆலயம் வருகிறதற்காக, சீத்தாபால் கிராமத்தில் புதிதாக ஆரம்பிக்கப்பட்ட ஊழியங்களுக்காக துதிப்போம். பேஸ்மேடா கிராமத்தில் ஆலயம் கட்டப்பட, புத்ராம் சாலேம் கை, கால்வலியிலிருந்து சுகமடைய, கணவனை இழந்து கவலைப்படும் கோட்ரே பொட்டாய்க்கு தேவஆறுதல் கிடைக்க ஜெபிப்போம்.

**திரு. சுகுல் சலாம்**

ஊழியரையும், விசுவாசிகளையும் தேவன் பாதுகாத்ததற்காக துதிப்போம். 2021ன் தரிசனம், புதிய திட்டம் நிறைவேற்றப்பட, சுகோ பொட்டாய்க்கு அசுத்த ஆவியிலிருந்து விடுதலை கிடைக்க, மணி பொட்டாய், சோம்நாத் பொட்டாய், மங்கல்ராம், ரெயினி வட்டே ஆகிய புதிய விசுவாசிகள் விசுவாசத்தில் வளர, சாந்தகாவ், சிர்பூர், பேக்பேடா, கூடும் கிராம மக்களின் இரட்சிப்பிற்காக ஜெபிப்போம்.

**சத்நாமிஸ் மக்கள் கூட்டம் [ சத்தீஷ்கர் மாநிலம்]**

**திரு. ரகுநாத்-ராஜகுமாரி**

லஷ்மிக்கு நடைபெற்ற திருமணத்திற்காக, அகன் உடம்புவலி சுகம் அடைந்ததற்காக, 83 நாட்கள் உபவாசமிருந்து ஜெபிக்க தேவன் உதவியதற்காக துதிப்போம். சரோஜ் ஆவிக்குரிய வாழ்வில் வளர, சுனிதா பாய் மீண்டும் ஆலயம் வர, சாட்ராமுக்கு இருக்கும் தடைகள் நீங்கி ஆலயம் வர ஜெபிப்போம்.

**திரு. சிவபிரசாத்- அஞ்சலி**

ஞானமுழுக்கு பெற்ற 3 பேருக்காக, எலிசாவின் இருமல் சுகமானதற்காக, ஜெபக்கூட்டம் தொடர்ந்து நடைபெற்று வருகிறதற்காக துதிப்போம். ராஜேஷ்வரிக்கு திருமணம் நடைபெற, தீபக் பால் உடல் பெலவீனத்திலிருந்து சுகமடைய, சந்திரபாபு நெஞ்சுவலி நோயிலிருந்து சுகமடைய, ஊழியருக்கு தேவஞானம், பெலன் கிடைக்க ஜெபிப்போம்.

**ஜார்க்கண்ட் மாநிலம்**

**திரு. குந்தர் பாகேல்-மம்தா**

ஊழியருக்கு வாடகை வீடு கிடைத்ததற்காக, நற்செய்தி அறிவிக்கப்பட்ட 30 நபர்களுக்காக துதிப்போம். ஓங்க்நார் விசுவாசத்தில் வளர, நற்செய்தி கேட்ட சுமோத் இரட்சிக்கப்பட, கிறிஸ்துமஸ் ஆராதனைக்கு வந்த புதிய நபர்கள் தொடர்ந்து ஆலயம் வர ஜெபிப்போம்.



**ஒடிசா [குவி, தேசியா மக்கள் கூட்டம்]**

**திரு. டேனியல் சிரிக்கா**

குமலகுடா பகுதி மக்கள் ஆராதனைக்கு வருகிறதற்காக துதிப்போம். பாலிஜோடிபொதர் கிராம மக்களின் பிரிவினை சக்திகள் மனந்திரும்ப, கும்டகுடா கிராம மக்கள் ஆவிக்குரிய வாழ்வில் வளர, பின்மாற்றத்தில் உள்ள சாபு, கோபி ஆகியோர் மீண்டும் ஆலயம் வர, ஊழியரின் மகன் சாமுவேல் பெலவீனத்திலிருந்து சுகமடைய ஜெபிப்போம்.

**திரு. சுபாஷ் சிரிக்கா-சாந்தா சிரிக்கா**

ஊழியருக்கு விரோதமான எதிர்ப்புகள் மறைந்ததற்காக, புதிதாக நற்செய்தி கேட்ட மக்கள் ஆலயம் வருகிறதற்காக துதிப்போம். ஆசிர்வோர்காந்தா, இலட்சிய காந்தா, சோர்கவே காந்தா, சுக்தலிங்கு ஆகியோரின் இரட்சிப்பிற்காக, ஊழியரின் ஆவிக்குரிய வாழ்விற்காக ஜெபிப்போம்.

**திரு. சம்புரு சிரிக்கா- சம்பாபதி சிரிக்கா**

புதிதாக ஆலயம் வரும் ருக்குனா, ஜம்போ, வாட்ரி ஆகியோருக்காக, சம்பா சிரிக்காவுக்கு தேவன் தந்த சுகப்பிரசவத்திற்காக துதிப்போம். கிரசுலா பணித்தளத்தில் ஆலயம் கட்டப்பட, சம்பா சிரிக்காவின் மனபயங்கள் நீங்க, வசந்தா ஆலயம் வருவதற்கான தடைகள் நீங்க, பங்குரு, பத்ரு ஆகிய ஊர் தலைவர்களின் இரட்சிப்பிற்காக ஜெபிப்போம்.

**திரு. மேத்யூ சிரிக்கா-மோனி சிரிக்கா**

கொடிகுடா பணித்தளத்தில் நற்செய்தி கேட்ட புதிய நபர்களுக்காக துதிப்போம். டொம்புரு, முக்த்தா, மாரியா, காஷீ, டிக்கு ஆகியோர் ஜெபத்தில் கலந்துகொள்ள, கொடிகுடா கிராம மக்களின் இரட்சிப்பிற்காக, மகுலுபேடா கிராமத்தில் நற்செய்தி கேட்ட குட்டு, மீனு ஹரிஜன், ஹரிமுதலி, ஹரிகாந்த் , பாசுஜாணி, ரகுசாந்தா ஆகியோர் இரட்சிப்பிற்காக, கொம்முகுயிகாவின் ஊர் தலைவர் மனந்திரும்ப ஜெபிப்போம்.

**திரு.N. பிரின்ஸ் ராய்சன் -ரேணுகா**

கோராபுட் சிறைச்சாலையில் நற்செய்தி அறிவிக்கப்பட்டதற்காக துதிப்போம். நற்செய்தி கேட்ட பகவான், சன்டல்சுக்ரி, கிருஷ்ணா, டம்புரு, கணேஷ், அஜய் ஆகியோர் தேவ அன்பில் வளர, டிக்கிரி பகுதியில் வீடு கிடைக்க, படசுடா, போண்டி, டுடிபார் ஆகிய கிராமங்களில் ஊழியம் ஆரம்பிக்கப்பட ஜெபிப்போம்.

**திரு. வைரமுத்து-தமிழ்செல்வி**

ஜாம்தொரா மற்றும் தேவ்பூர் கிராமங்களில் தடையின்றி நடைபெற்ற ஆராதனைக்காக, இயேசுவின் வாழ்க்கை வரலாற்றை திரைப்படம் மூலம் மூன்று கிராமங்களில் திரையிடப்பட்டதற்காக, டியூசனில் கலந்துகொள்ளும் சிறுபிள்ளைகளுக்காக துதிப்போம். சிறுவர் பள்ளி வரும் சிறுவர்களின் பெற்றோர் இரட்சிக்கப்பட, தேபெத்தோய் பிசாசின் பிடியிலிருந்து விடுதலை பெற, நாரிஹா கிராமத்தில் நடத்தப்படும் ஜெபக்கூட்டம் தடையில்லாமல் நடத்தப்பட, விசுவாசிகள் பெலப்பட ஜெபிப்போம்.

**திரு. அப்பொல்லொ மண்டல்-அஸ்வினா**

குட்டுஹாங் கிராமத்தில் புதிதாக ஆலயம் வரும் விசுவாசிகளுக்காக, துக்குகோண்டுவின் மனநோய் சரியானதற்காக, லொக்கி சொந்தாவிற்கு தேவன் தந்த சுகப்பிரசவத்திற்காக துதிப்போம். தொட்ராபாரா கிராமத்தில் ஆலயம் கட்டப்பட, ஞானமுழுக்கு பெற ஆயத்தமாய் இருக்கும் 15 நபர்கள் தடையின்றி திருமுழுக்கு எடுக்க, ஆகாஷ் மற்றும் சுரஜ் ஆகியோர் ஆலயம் வருவதற்கான தடைகள் நீங்க, சந்தோஷ் ஆவிக்குரிய வாழ்வில் வளர, ராகுல் வயிற்றில் இருக்கும் கட்டியிலிருந்து சுகமடைய ஜெபிப்போம்.

**சனி**

**திரு. நரகேரி**

சுனேஷ் குடும்பம் தேவனை ஏற்றுக்கொண்டதற்காக, ஊழியரின் அம்மா ஆர்வமாக நற்செய்தி கேட்டதற்காக துதிப்போம். ஊழியரின் ஊழிய பயிற்சி ஆசீர்வாதமாக அமைய, ஊழியரின் உறவினர்கள் ஆலயம் வர ஜெபிப்போம்.

**திரு. பிரமோத்**

முகேஷ் மற்றும் ராகேஷ் ஆகியோரின் மனமாற்றத்திற்காக, புதிதாக ஜெபக்கூட்டத்தில் கலந்துகொண்ட இந்தல் தாகூர் குடும்பத்திற்காக, விஜய் என்பவர் புதிதாக ஆலயம் வருவதற்காக துதிப்போம். நற்செய்தி கேட்ட தீபக், பூஜா இருவரும் மனந்திரும்ப, துக்கன் தேவி நீண்ட நாள் வயிற்றுவலியிலிருந்து சுகமடைய, முகேசுக்கு நல்ல வேலை கிடைக்க, பவிதா தேவி குடும்பம் மனந்திரும்பி ஆலயம் வர ஜெபிப்போம்.

**திரு. பீஹாரி**

சவிதா இரத்தப்போக்கு நோயிலிருந்து சுகம் பெற்றதற்காக, உமேஷ் மனநோயிலிருந்து சுகமானதற்காக, அனிதாவுக்கு அறுவை சிகிச்சை நல்லமுறையில் நடைபெற்றதற்காக துதிப்போம். குஞ்சன் தாகூர் மூச்சு திணறல் நோயிலிருந்து சுகம் பெற, தரி புலோ பாம்பு கடி வீக்கம் சுகமடைய, பூலோ, ரேகா, ராம், சந்தர், பின்கு, ரீராம் ஆகியோர் இரட்சிக்கப்பட ஜெபிப்போம்.

**திரு. அன்பு**

பிரீத்தி விபத்திலிருந்து பாதுகாக்கப்பட்டதற்காக, சுக்கோ மற்றும் கேகா ஆகியோர் இயேசுவை ஏற்றுக் கொண்டதற்காக துதிப்போம். அசோக், விஷால், தீபக் ஆகியோர் மனந்திரும்ப, மரண தருவாயில் இருக்கும் பேக்கன் சுகமடைய, சரவணன் (உடல்நிலை சீராக), சிரோ (எலும்புமுறிவு), விவா தேவி (சரீர பெலவீனம்) ஆகியோருக்கு சுகம் கிடைக்க, சுஷ் என்பவரின் தேவபாதுகாப்பிற்காக ஜெபிப்போம்.

### உத்திரபிரதேச மாநிலம் (அவாதி மக்கள் கூட்டம்)

**திரு. மிதிலேஷ் குமார்**

11 பேர் ஞானமுழுக்கு பெற்றதற்காக, ரோஷ்னி தேவிக்கு தேவன் தந்த சுகப்பிரசவத்திற்காக துதிப்போம். பிரித்தி ( வயது 2) எரியும் நெருப்பில் விழுந்ததனால் ஏற்பட்ட காயம் சுகமடைய, பக்திரி யாஹார் பணித்தளத்தில் ஆராதனைக்கென்று ஒரு கூடாரம் போடப்பட, 50 சீஷர்களை இந்த வருட இறுதிக்குள் உருவாக்க ஜெபிப்போம்.

**திரு. பீட்டர் பெருமாள் -ஜெயசீலி**

ராம் தேவி – ராம் சாகர் ஆகியோருக்கு தேவன் தந்த குழந்தை பாக்கியத்திற்காக, மணீஷ்க்கு தேவன் தந்த நல்ல வேலைக்காக, சிவபிரசாத்துடைய தங்கைக்கு நல்ல முறையில் திருமணம் நடைபெற்றதற்காக துதிப்போம். ரேகா தேவிக்கு B.Ed., படிப்பு தேவைகள் சந்திக்கப்பட, பல்லவியின் இரட்சிப்பிற்காக, சிவானி மற்றும் விக்ரம் இருவரும் ஆவிக்குரிய வாழ்வில் வளர ஜெபிப்போம்.

**திரு. அனில்குமார்-ராம்பத்தி**

ராம் லலிதாவுடைய நிலம் திரும்ப கிடைக்க தேவன் உதவியதற்காக, உமேஷ் தைராய்டு நோயிலிருந்து சுகம் பெற்றதற்காக, காம்தாவின் கணவர் மனந்திரும்பியதற்காக துதிப்போம். பப்னா மற்றும் சச்சய் குடிப்பழக்கத்திலிருந்து விடுதலை பெற, ரூபி பெரும்பாடு நோயிலிருந்து சுகம் பெற, ஊழியரின் மகள் பூனுவுக்கு நல்ல முறையில் திருமணம் நடைபெற ஜெபிப்போம்.

**திரு. ராம்ஜியவான்-ராஜலட்சுமி**

பிஸ்வான் பணித்தள கிறிஸ்மஸ் ஆராதனையில் கலந்துகொண்ட 300 பேர் கிறிஸ்துவின் செய்தியை கேட்டதற்காக, மகாராஜா மூலநோயிலிருந்து சுகம் பெற்றதற்காக, சந்திர பிரகாஷ் குடலிறக்க நோயிலிருந்து சுகமானதற்காக துதிப்போம். பிரமேஷ்குமார் – பிரிய தேவி தம்பதியினர் இரட்சிக்கப்பட, குழந்தை பாக்கியம் கிடைக்க, சரோஜ் மனநோயிலிருந்து சுகம் பெற, சாலு கர்ப்பப்பை கட்டி நோயிலிருந்து சுகமடைய ஜெபிப்போம்.

**திரு. தினகரன் -லீனா குமாரி**

நற்செய்தி அறிவிக்க எல்லா தடைகளும் நீங்கியமைக்காக, முடியாவிற்கு தேவன் தந்த ஆண் குழந்தைக்காக துதிப்போம். கிறிஸ்துமஸ் நிகழ்ச்சியில் கலந்து கொண்டவர்கள் இரட்சிக்கப்பட, நற்செய்தி கேட்ட ஹரிநாராயணன், கீமல், விஸால், சிவக்குமார், பீம்லால், கங்கா, முன்னிதேவி, சாந்தி ஆகியோர் விசுவாசத்தில் பெலப்பட ஜெபிப்போம்.



**ஊழியம்தான்... ஆனால்?** புதிய நாவல் **01**

# தொடருகின்ற கேள்விகள் !?

-அறிவு

சென்னை மாநகரத்தின் மீனம்பாக்கம் "**அறிஞர் அண்ணா பன்னாட்டு விமான நிலையம்**" அந்த அதிகாலையிலேயே கலகலப்பாக இருந்தது. லண்டனின் இருந்து வரும் விமானம், துபாயிலிருந்து வரும் விமானம், சிங்கப்பூரிலிருந்து வரும் விமானம் எல்லாம் காலை 3 மணியிலிருந்தே ஒவ்வொன்றாக வரத் தொடங்கின. மொரிஷியஸ் தீவிலிருந்து வரும் விமானம் சரியாகக் காலை 4 மணிக்கு வந்து தரையிரங்கியது. அதில் வந்த டாக்டர் மாணிக்கத்தை வரவேற்க மூன்று பேர் கொண்ட ஒரு மூவரணி தயாராக இருந்தது.

டாக்டர் மாணிக்கம், இம்மானுவேல் இறையியல் கல்லூரியின் நிறுவனரும், 17 ஆண்டுகள் அக்கல்லூரிக்கு முதல்வராக இருந்தவரும் ஆவார். கடந்த 8 ஆண்டுகளுக்கு முன் மொரிஷியஸ் தீவிற்கு அருட்பணியாளராகச் சென்றார். ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழகத்தில் வரலாற்றுத்துறையில் டாக்டர் பட்டம் பெற்றதால், மொரிஷியஸ் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றுகிறார். அத்துடன் அங்குள்ள ஒரு சிறிய இறையியல் கல்லூரிக்கும் உதவி செய்கிறார்.

இம்மானுவேல் இறையியல் கல்லூரியின் 25ஆவது ஆண்டு விழாவில் கலந்து கொள்ளவே இன்று சென்னை வருகிறார். அவருடைய பழைய மாணவர்களான ஞானமுத்து, ஜேம்ஸ், முத்துக்காளை ஆகியோர்தான் வரவேற்க வந்த அந்த மூவரணி. அவர்கள் மூவரும் 15 ஆண்டுகளுக்குமுன்னர் அந்தக் கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றவர்கள். ஞானமுத்து இப்போது காஞ்சிபுரம் அருகே உள்ள கருவேலம்பட்டியில் ஒரு சபையை உருவாக்கி அதற்குப் போதகராயிருக்கிறார். ஜேம்ஸ் கோவை மாநகரில் '**நற்செய்தி மாணவர் மன்றத்தில்**' கல்லூரி மாணவர் நடுவில் பணிசெய்கிறார். முத்துக்காளை உசிலம்பட்டிப் பகுதியில் "**அன்புப் பண்ணை**" என்னும் ஓர் இயக்கத்தை ஆரம்பித்து பல்வேறு முறைகளில் (ஒரு சிற்றாலயம், மாணவர் விடுதி, பால்பண்ணை, தென்னந்தோப்பு, ஒரு சிறிய மருத்துவமனை) ஊழியம் செய்து வருகிறார்.

மூவரணியினர் பல மாதங்கள் கழித்து ஒருவரையொருவர் பார்க்கிறார்கள். ஒரே மகிழ்ச்சி. கைகுலுக்கல்கள்; கட்டித் தழுவுதல்கள்– குடும்பங்களைப் பற்றிய அன்பு விசாரணைகள்– ஊழியத்தைப் பற்றிய புதிய தகவல்கள்– புதிய கேள்விகள். சுமார் அரைமணி நேரம் உற்சாகமாகப் பேசிக்கொண்டிருந்தனர்.

டாக்டர் மாணிக்கம் தன்னுடைய குடிபுகல் (Immigration), சுங்கம் (Customs) முடித்துத் தன்னுடைய பயணப்பைகளை எடுத்துக் கொண்டு வெளியே வர காலை 5 மணிஆனது.

"**இந்தியாவும், தமிழகமும் உங்களை வரவேற்கின்றன**" என்று அன்போடு மூவரும் அவரிடம் வணக்கம் சொன்னார்கள். ஞானமுத்து அழகிய ரோஜாப்பூ மாலையொன்றை அணிவித்தார். முத்துக்காளை பொன்னாடை ஒன்றைப்

போர்த்தினார். ஜேம்ஸ் பூச்செண்டு ஒன்றைக் கொடுத்தார். அவருடைய பொருட்களை அவர்கள் எடுத்துக்கொள்ள எல்லோரும் கல்லூரி வேனில் ஏறி இம்மானுவேல் இறையியல் கல்லூரிக்குப் புறப்பட்டனர்.

டாக்டர் மாணிக்கத்தின் முகத்தில் மிகுந்த மகிழ்ச்சி." **மிக்க நன்றி! என் இளம் நண்பர்களே! நான் இந்த வரவேற்பை எதிர்பார்க்கவில்லை. ஒரு டாக்சி வைத்துக்கொண்டு செல்லலாம். இந்த அதிகாலையில் யார் வருவார்கள் என்று நினைத்தேன்"** என்றார். அரைமணி நேரத்தில் அந்த வேன் கல்லூரியை அடைந்தது.

கல்லூரி வாசலில் முதல்வர் டாக்டர் அருமை நாயகமும், மற்ற பேராசிரியர்களும், சில மாணவர்களும் கூடி இருந்தனர்.

"**நீங்கள் தோற்றுவித்த இந்தக் கல்லூரி உங்களை வரவேற்கிறது**" என்று அவரைக் கட்டித்தழுவினார் முதல்வர் அருமை நாயகம். அவரும் ஓர் அழகான மல்லிகைப்பூ மாலையை அணிவித்தார். டாக்டர் மாணிக்கத்தின் கண்கள் கலங்கின. "**தாய்நாடு வருவது தாய்வீட்டிற்கு வருவதைப்போலத்தான் இருக்கிறது. எல்லாருக்கும் என் நன்றி! நன்றி!**" என்றார்.

விருந்தினர் அறைக்கு அவரை அழைத்துச் சென்றனர். அருமை நாயகம் சொன்னார்: "டாக்டர் மாணிக்கம், இன்று காலையிலிருந்து நிகழ்ச்சிகள் ஆரம்பமாகின்றன. காலை உணவிற்குப் பின் முதல்கூட்டம் – அது பழைய மாணவர்களுக்காக. அதில் டாக்டர் ஞானமுத்து பேசுகிறார். மற்ற மாணவர்களும் தங்கள் ஊழியங்களைப் பகிர்ந்து கொள்ளுவார்கள். அது 9 மணிமுதல் 12 மணிவரை. மதிய உணவிற்குப்பின்னர், இரண்டாவது கூட்டம் பழைய மாணவர்களுக்கும் இன்றைய மாணவர்களுக்கும் மதியம் 2 மணிமுதல் 4 மணிவரை. அதில் நான் கொஞ்ச நேரம் பேசியபின், சிறு சிறு குழுக்களாகப் பிரிக்கப்பட்டு நடக்கும். ஒவ்வொரு குழுவிலும், பழைய மாணவர்களும் இன்றைய மாணவர்களும் இருப்பார்கள். மாலை 7 மணிக்கு நடக்கும் 25ஆவது ஆண்டுவிழாவில் பொதுமக்களும் வருவார்கள். அதில் நீங்கள் பேசுகிறீர்கள்.

இந்த 25 ஆம் ஆண்டுவிழாவின் நோக்கப் பொருள் (Theme) : **நேற்று இன்று நாளை மாறிவரும் உலகில் மாறாத நற்செய்தி.** இரவெல்லாம் பயணம் செய்த களைப்பு இருக்கும். முடிந்தால் நீங்கள் காலை, மதியக்கூட்டங்களுக்கு வாருங்கள். இல்லாவிட்டால் ஓய்வெடுங்கள். மாலையில் வந்தால் போதும். உங்களை வரவேற்க வந்த மூவரணி உங்களுக்கு அடுத்த அறையில் தங்கியுள்ளனர். என்ன உதவி வேண்டுமானாலும் அவர்களைக் கேளுங்கள். காலை உணவு 8 மணிக்கு உங்கள் அறைக்கு அனுப்புகிறேன்."

மாணிக்கம் சொன்னார்: "மிக அருமையான புரோகிராம் (program). கொஞ்சம் களைப்புத்தான். ஒரு இரண்டுமணி நேரம் ஓய்வெடுக்கிறேன். காலை உணவு இங்கே அனுப்ப வேண்டாம். எல்லாரும் சாப்பிடும் இடத்திற்கே வந்துவிடுகிறேன். இது என் தாய்வீடு தானே!"

காலை உணவிற்குப் பழைய மாணவர்களும், புதிய மாணவர்களும், ஆசிரியர்களும் கூடினர். ஒரே மகிழ்ச்சி ஆரவாரம். சாப்பாட்டு அறை இடம் போதாதால், வெளியே ஒரு பெரிய பந்தலும் போடப்பட்டிருந்தது. இட்லி, தோசை, பொங்கல், சாம்பார், சட்னி, கறிக்கொழும்பு என்று உணவு வகைகள் ஏறுகின்ற பசியை அடக்கின. 25ஆம் ஆண்டுவிழாவின் முதல் கூட்டம் – முன்னாள் மாணவர்களுக்கான கூட்டம் – சரியாக 9 மணிக்குத் தொடங்கும் என்ற அறிவிப்பும் கொடுக்கப்பட்டது.

சுமார் 200 முன்னாள் மாணவர்கள் கூடிய அந்தக்கூட்டத்திற்குப் பழைய



மாணவர் சங்கத்தின் அந்த ஆண்டுத் தலைவரான ஜேம்ஸ் தலைமை தாங்கினார். நிறுவனர் டாக்டர் மாணிக்கத்தையும், முதல்வர் அருமைநாயகத்தையும் வரவேற்றபின், கூட்டத்தின் பேச்சாளர் டாக்டர் ஞானமுத்தையும் அறிமுகப்படுத்தினார். 15 ஆண்டுகளுக்கு முன்னர் நானும் நண்பர் ஞானமுத்துவும் இந்தக்கல்லூரியில் படித்து முடித்தோம். அந்தப் பத்தாவது பட்டமளிப்பு விழாவில் ஞானமுத்து கேட்ட கேள்வி இன்றும் என் காதுகளில் ஒலிக்கிறது. "**இந்தியப் பெரு நாடும், நம் தாய்த்திரு தமிழ் நாடும் என்று இயேசுவைச் சரியாகவும், தெளிவாகவும் அறியும்?**" என்பதே அந்தக் கேள்வி.

கடந்த 15 ஆண்டுகளாக அந்தக்கேள்விக்கு நான் மட்டுமல்ல நாம் எல்லாருமே பதில்கொடுக்க முயற்சி செய்துவருகிறோம். ஆனால் அந்தக் கேள்வியைக் கேட்ட ஞானமுத்துவுக்கு இந்தக்கல்லூரி 8 ஆண்டுகளுக்கு முன்னால் கவுரவ டாக்டர் பட்டத்தை அளித்தது. அந்த நாளிலும் நான் இங்கு இருந்தேன். அடிக்கடி நானும், முத்துக்காளையும் அவரும் சேர்ந்து உரையாடுவதும் உண்டு. இன்று காலையில் அந்த டாக்டர் ஞானமுத்து அவர்களை அறிமுகப்படுத்தி நமக்குத் தேவையான ஒரு செய்தியைக் கொடுக்கும்படி அழைக்கிறேன்.

ஞானமுத்து மேடையில் ஏறினார். 15 ஆண்டுகளுக்கு முன்னர் மாணவனாக இருந்த நிலையும், 8 ஆண்டுகளுக்கு முன்னர் டாக்டர் பட்டம் பெற்ற நிலையும் நினைவுக்கு வந்தது. வழக்கமாக ஒரு கீர்த்தனையோடு பேச்சைத் தொடங்கும் அவர் கீழ்க்கண்ட கீர்த்தனையைப் பாடினார். சந்தியாகுப் போதகர் இயற்றியது அப்பாடல்:

தாசரே இத்தரணியை அன்பாய்
இயேசுவுக்குச் சொந்தமாக்குவோம்
நேசமாய் இயேசுவைக்கூறுவோம்! அவரைக் காண்பிப்போம்!
மாவிருள் நீக்குவோம்; வெளிச்சம் வீசுவோம்!

1
வருத்தப்பட்டுப் பாரஞ்சுமந்தோரை
வருந்தியன்பாய் அழைத்திடுவோம்;
உரித்தாய் இயேசு பாவபாரத்தை, நமது
துக்கத்தை நமது துன்பத்தைச் சுமந்து தீர்த்தாரே!

2
மார்க்கம் தப்பி நடப்போரைச் சத்ய
வழிக்குள் வந்திடச் சேர்த்திடுவோம்
ஊக்கமாக ஜெபித்திடுவோம்; நாமுயன்றிடுவோம்!
நாம் உழைத்திடுவோம்; நாம் ஜெயித்திடுவோம்!

பாட்டுக்குப் பின் உரையைத் தொடங்கினார்:

"தலைமை தாங்கும் நண்பர் ஜேம்ஸ் அவர்களே! நிறுவனர் டாக்டர் மாணிக்கம் அவர்களே! முதல்வர் அருமைநாயகம் அவர்களே! இந்த வாய்ப்புக்கு நன்றி. இன்று காலை சங்கீதம் 104ஐ படித்துக் கொண்டிருந்தேன். அதில் ஊழியர்களாகிய நம்மை அக்கினி ஜுவாலைகள், தீப்பிழம்புகள் என்று எழுதப்பட்டிருந்த 4ஆம் வசனம் என்னை ஊக்கப்படுத்தியது. நம்மில் சிலருடைய தீப்பிழம்புகள் சுடர்விட்டு எரிகின்றன. சிலருடைய தீ மங்கி எரிகிறது. என்னுடைய முதல் கேள்வி, நம்முடைய தீ எப்படி எரிகிறது? சுடர் விட்டாலும், மங்கி எரிந்தாலும் அந்தத் தீயைத் தூண்டிவிடவே உங்களையும் என்னையும் அவர் இந்த

ஆண்டுவிழாவிற்குக் கொண்டுவந்துள்ளார் என்று நான் நம்புகிறேன்.

இன்று காலையில் உங்களோடு நான் பேச எடுத்துக்கொண்ட தலைப்பு, **அழைப்பு –உழைப்பு –பிழைப்பு.** நாம் எல்லாருமே ஊழியம் செய்யும் அழைப்புப் பெற்றவர்கள். அதனால்தான் இந்தக் கல்லூரியில் பயிற்சிபெற வந்தோம். இப்போது பல்வேறு அனுபவங்களோடு முன்னாள் மாணவர்களாக வந்திருக்கிறோம். ஆண்டவருக்காக வைராக்கியமாக உழைக்கிறோம், உழைக்க விரும்புகிறோம். நம்முடைய அனுபவங்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்.

ஆங்கிலத்தில் Success Experience - Sad Experience Struggling Experience என்று கூறலாம். ஊழியத்தில் முதலாவது சாதனைகள் இருந்தன– அவை வெற்றியைக் கொடுத்தன; இரண்டாவது வேதனைகளும் இருந்தன. தோல்விகளால், ஏமாற்றங்களால் ஏற்பட்ட வேதனைகள் அவை. மூன்றாவதாக போராட்டங்கள் தடுமாற்றங்கள் இருந்தன – தொடருகின்றன. தனிப்பட்ட வாழ்விலும் ஊழியத்திலும் இத்தகைய போராட்டங்களைச் சந்தித்தோம் – சந்திக்கிறோம்– சந்திக்கப்போகிறோம். நாட்கள் செல்லச் செல்ல நம்முடைய அழைப்பை மறக்கிறோம். ஆண்டவருக்காக உழைக்கிறோமே ஒழிய அவர் பாதம் அமருவதைக் குறைக்கிறோம். மார்த்தாளாக இருக்கிறோம்; அவரோ மரியாளைப் பாராட்டுகிறார். பவுலின் எச்சரிக்கை 2 தீமோத்தேயு 2:4இல் வருகிறது. பிழைப்புக்கு அடுத்த அலுவல்களில் சிக்கிக் கொள்ள வேண்டாம் என்று.

முன்னாள் மாணவர்களாகிய நம்மிலே மிகக்குறைந்த அனுபவம் உடைய ஊழியர்கள் இருக்கிறீர்கள். மிகுந்த அனுபவம் மிக்க டாக்டர் மாணிக்கம், டாக்டர் அருமைநாயகம் போன்ற மூத்த ஊழியர்கள் இருக்கிறார்கள். என்னைப் போன்ற 15 ஆண்டுகள் ஊழியம் செய்த, மத்திய அனுபவம் மிகுந்த சிலரும் இருக்கிறோம். நமக்கு முன்பாக ஒரு கேள்வி அல்ல; பல கேள்விகள் இருக்கின்றன.

இந்த 25 ஆம் ஆண்டுவிழாவின் நோக்கப்பொருள்: **"நேற்று இன்று நாளை மாறிவரும் உலகில் மாறாத நற்செய்தி"** நேற்று மாணவர்களாக இருந்தபோது நமக்குக் கனவுகள் இருந்தன; இப்போது அவைகள் என்ன ஆயின? ஊழியத்தில் ஒருசிலருக்கு மட்டும் வெற்றி கிடைக்கிறது ஏன்? நற்செய்தி என்னும் விடைக்கு ஏன் இத்தனை தடைகள்? எனக்கு வரும் சோதனைகள் எனக்கு மட்டும் தானா? என் ஆவிக்குரிய வாழ்வில் ஏன் தளர்ச்சி? ஏன் வீழ்ச்சி? சில ஊழியர்களுக்குப் புகழும் பெருமையும் கிடைக்கிறது. எனக்கோ பழியும் வறுமையும் தான் இருக்கிறது. இது ஏன்? யூதாசு இயேசுவுக்குத் துரோகம் செய்ததுபோல எனக்குச் சிலர் துரோகம் செய்கிறார்கள் அவர்களை என்ன செய்வது?

என்னுடைய உரைக்குப் பின்னர், ஜெபத்திற்குப் பின்னர் – மூன்றுபேர் அல்லது நான்குபேர் கொண்ட குழுக்களாகப் பிரிந்து கொள்ளுவோம். அந்தக்குழுவில் மனம்விட்டுக் கேள்வி கேளுங்கள். உங்களுக்குத் தெரிந்த பதில்களையும் பகிர்ந்துகொள்ளுங்கள். ஒருவருக்காக ஒருவர் ஜெபியுங்கள். நாம் எல்லாரும் அக்கினி ஜுவாலைகள், தீப்பிழம்புகள்! மறக்கவேண்டாம்.

ஞானமுத்துவின் அனல்பறக்கும் உரை முடிந்தது. அவர் ஜெபிக்கத் தொடங்கியபோது சிலருடைய கண்கள் கலங்கின. பின்னர் சிறு குழுக்களாகப் பிரிந்து சென்றனர். அவர்கள் உள்ளத்தில் இருந்த கேள்விகள் பகிர்ந்து கொள்ளப்பட்டன. பதில்களும் கிடைத்தன. ஜெப நேரத்தில் பல குழுக்களிலிருந்து ஊழியர்கள் கதறி அழும் அழுகைக்குரல்களும் வந்தன.

மதிய உணவுக்கு அழைப்பு வந்தது.

வளரும்...



# ஜனவரி மாத வினாக்களுக்கு விடைகள்

## சங்கீதம் 136-150 முடிய

**I பொருத்துக**

1. யாழ் - தீங்குழல் 150:4
2. அலரிச்செடிகள் - கின்னரங்கள் 137:2
3. கிராமங்கள் - ஆடுகள் 144:13
4. இக்கட்டு - ஜெபம் 141:5
5. உதடு - விஷம் 140:3

**II கோடிட்ட இடங்களை நிரப்புக**

1. கூப்பிட்ட நாளிலே, மறு உத்தரவு, ஆத்துமாவிலே, பெலன் தந்து, தைரியம் 138:3
2. நாமம், உயர்ந்தது, மகிமை, பூமிக்கும், வானத்திற்கும் 148:13
3. கர்த்தாவே, புதுப்பாட்டை, தம்புரினாலும், பத்து நரம்பு வீணையினாலும், கீர்த்தனம் 144:9
4. பிரியமானதை, போதித்தருளும், என் தேவன், நல்ல ஆவி, செம்மையான வழியிலே 143:10
5. உமக்கு மறைவாக, இருளும், இரவும் பகலைப், வெளிச்சமாயிருக்கும், இருளும் வெளிச்சமும் 139:12

**III விடை எழுதுக**

1. பெரியவரும் மகா பெலமுள்ள வருமாயிருக்கிறார் 147:5
2. தம்மை நோக்கிக் கூப்பிடுகிற, உண்மையாய்த் தம்மை நோக்கிக் கூப்பிடுகிற யாவருக்கும் 145:18
3. பாழாக்கினார்கள் 137:3
4. என் அவயவங்களில் ஒன்றாகிலும் இல்லாதபோதே அவைகள் அனைத்தும் உருவேற்படும் நாட்களும் 139:16
5. நீதிமான் தயவாய்க் குட்டி கடிந்து கொள்வது 141:5

## வளரும் விண்ணரசு விடைகள்

**அருட்செய்தி-**

1. நற்செய்திப் பணியின் இருபக்கங்கள்.
2. கர்த்தர் ஆபிரகாமை சகல காரியங்களிலும் ஆசீர்வதித்து வந்தார். ஆதியாகமம் 24:1
3. இயேசு கிறிஸ்துவின் சாதனை.

**துதித்து மன்றாடுவோம்...**

4. திரு.J. ஜெயகுமார்
5. கோண்டுகள்

**ஆசீர்வதிப்பேன் வா**

6. நண்பன், கூட்டாளி, கூட்டுறவு
6. கீரியாத் அர்பா
7. அறுபது ஆண்டுகள்

**பொதுச்சேவகர் கடிதம்**

8. ஜோதிமாணிக்கம்
9. பெருங்காமநல்லூர்
10. கர்த்தருடைய கரத்தில்

- கேள்விகளை எழுதாமல், பதில்களை மட்டும் சுருக்கமாக எழுதவும். தபால் அட்டையில் எழுத வேண்டாம்
- தபால் அட்டையில் எழுதினால் பெயர் பிரசுரம் செய்யப்படாது.
- தங்கள் சந்தா எண், தொலைபேசி (அ) அலைபேசியுடன் (Cell) முழு முகவரியையும் எழுதவும்.
- பரிசுக்கு உரியவர்களை குலுக்கல் முறையில் தேர்வு செய்கிறோம்!



## 2021 ஜனவரி மாத வேத வினா - விடை போட்டியில் சரியான விடை எழுதியவர்களைப் பாராட்டுகிறோம்

**மதுரை**
ஜெயராணி மோகன்
சுசீலா ஆபிரகாம்
ஷீலா சுரேஷ்
ஜேனட் சாத்ராக்
ஹெப்சிபா பியூலா
தெல்மா ஸ்டான்லி
நவமணி தேவப்ரியம்
ஹெலன் திலக்
டேவிட் ஜெயச்சந்திரன்
பத்மா விஜயகுமார்
வினோதினி
துரைராஜ்
ஃப்ளோரா சுந்தர்
மேரி நிர்மலா ஆபிரகாம்
மேரி ஜெயகுமார்
ரூபி மனோகராஜ்
மேரி ஜெபராஜ்
வெற்றிச்செல்வி
கலா செல்வகுமாரி
ஹில்டா அலெக்ஸ்
தங்கமணி
ஜெர்லி இம்மானுவேல்
வசந்த கலா
ராணி ஸ்டான்லிபால்
மேரிராஜ்
ஹில்டா எலிசபெத்
சம்பு ஜெயச்சந்திரன்
ஜேக்சன்
ஆசீர்வாதம்
ஜெஸி சந்திரதாஸ்
ரித்திகா
ஏமி ஜெயராஜ்
ரத்னாபாய் ஜெசுதாசன்
குணசீலி செல்வராஜ்
ரஜினிபியூலா ஷோபிகா
கிருஷ்ணன்

**கன்னியாகுமரி**
தேவசகாயம்
ஜான்ரோஸ்
டயானா திலகன்
மோகன் சி கமலம்
ஜெயந்தி
லலிதா நெல்சன்
பிளஸ்ஸா கண்மணி
கெஸியா ஜாய்ஸ்லெட்
லிங்கேஸ்வரி
ரோஹிணி ஜேசன்
ரோலண்ட் ஹில்
கிறிஸ்டாபெல் ஜெயந்தி
பியூலா ஜான்சன்
லில்லி புஷ்பம்
ஜெபஜோதிபாய்
அருளப்பன்
இவாஞ்சலின் ராஜதுரை
சந்திராநான்சிபாய்
ஜான்சன்
பமீலா எட்வின்

**திருநெல்வேலி**
சாந்தி ராஜன்
பொன்னரசி
ஜாஸ்மின் ஜேக்கப்
வில்லியம் பிரெடெரிக்
ஞானசுந்தரி நாகராஜன்
தங்கம்
அன்பு சுதந்திரம்
ரோஸ்லின் ஜோசப்
ரூத்ஜெயராணி
கஸ்தூரி எலியாஸ்
கிளாடிஸ் ராஜையா
ரஜுலா செல்வின்
ரெஜினா சாலமோன்
ஜான்சி சந்தியா
எபினேசர்கிரேஸ்லின்
ஜெபா நியூட்டன்
பாக்கியம்
சந்திரா தாமஸ்
ரெஜினா மாணிக்கம்
ஹெலன் ஸ்வீட்

**தென்காசி**
சுகிர்தவல்லி பொன்னுசாமி
பியூலா சந்தோஷம்

**தூத்துக்குடி**
சுஜாதா
அசோக்குமார் பிரின்ஸ்
ரெத்னாவதி முத்துராஜ்
நவரத்தினம் ஞானராஜ்
லீலா டேவிட்சன்
ஆதி சிரோன்மணி
விமலா ஜெயக்குமார்
விக்டர் சுவிசேஷமுத்து
விக்டோரியா தேவதாஸ்
அந்தோணியம்மாள்
தேவகிருபை
அன்னத்தாய் ஆல்பர்ட்
சாந்தகுமாரி
தேவமணி ஆபிரகாம்
ரூபவல்யா
ஆலீஸ் குணசீலி

**சென்னை**
ஜான் ஆல்வின்
அன்னாள் ஜான்
சாந்தி டென்னிசன்
லவினியா ராஜா
கனகா வேணுகோபால்
விஜயராணி பெஞ்சமின்
ஜோன் வேதநாயகம்

**திருச்சி**
சுகந்தி ஜோன்ஸ்
ஜெபமணி டேவிட்
டேவிட்
ஜெபசீலி ஜெயக்கொடி
எஸ்.சி.சி.சூசன்னா
திலீப்குமார்
காந்தா மனோகரன்
பங்காரம்மாள்
ஆல்பர்ட் செல்வராஜ்
ரூத் பாக்கியராஜ்
ஜெயமணி தனபால்
லில்லியன் ஜோசப்
ஒய்ஸ்லைட் துரைராஜ்
கெட்சி தேவபுத்திரி

**கோயம்புத்தூர்**
லீலா ஜோசப்
செலின்ராணி டேவிட்
அருணோதயம்
கிறிஸ்டிபாய் வாசன்

**தேனி**
செல்வ விலாசினி டேவிட்
மலையரசி
எலிசபெத் பால்ராஜ்

**விருதுநகர்**
ஆலீஸ் ரெஜினாபாய்
கெட்சி தம்புராஜ்

**சேலம்**
ரோலண்ட் அருள்ராஜ்
இவாஞ்சலின் ஜோன்ஸ்
புஷ்பா பால்ராஜ்

**நாமக்கல்**
பிலிப்ஸ்

**திருப்பூர்**
ரேஷ்மா ஷேரன்
கனகா சத்தியவதி

**புதுக்கோட்டை**
சாந்தி வில்லியம்
தமிழரசி ஸ்டீபன்

**தஞ்சாவூர்**
குணசீலி ஸ்டீபன்
பிரமீளா செல்வம்
லீதியாள்
சிந்தி ஜாஷ்வா
ராஜா சமாதானம்
மல்லிகா ஞானபாய்

**திண்டுக்கல்**
மங்களவதி கேபிரியேல்

**சிவகங்கை**
பாலின் மார்டின்
அன்பு கமலம்

**வேலூர்**
பியூலா வைலட்
பத்மா குணாளன்

**கள்ளக்குறிச்சி**
தனம் பேன்சி
வசந்தா செல்வராஜ்

**நீலகிரி**
சுவீட்டி மைக்கேல்
உஷா பெஞ்சமின்

**ஈரோடு**
ரூத் நேசமணி

**பெங்களூரு**
பால்ராஜ்
டாரத்தி சாந்தகுமாரி
சூர்யா ரிச்சர்ட்சன்

**திருவண்ணாமலை**
பீட்டர் தாமஸ்

**பாண்டிச்சேரி**
பியூலா ஜெசுராஜன்

அன்பு வாசகர்களே, வேதவினாக்கள் மற்றும் இந்த புத்தகத்திலிருந்து கேட்கப்படும் கேள்விகளுக்கும் சேர்த்து விடையளிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.



ஆசீர்வதிப்பேன் வா! தன் வரலாற்றுத் தொடர் 13

# நூறு ஆண்டுகளின் ஆசீர்வாதங்கள்!

நாதன்

வாழ்வுச் சக்கரம் விரைவாகச் சுற்றுகிறது.

ஆண்டுகள் வேகமாகச் செல்லுகின்றன.

ஊர் என்னும் ஊரில், ஆபிராம் என்னும் பெயருடன் தொடங்கிய வாழ்வு, கானான் என்னும் வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட நாட்டிற்கு வந்தபின் ஆபிரகாம் என்று எல்லாம் வல்ல இறைவனான "**எல்ஷடாயால்** மாற்றப்பட்டது."

இப்போது எனக்கு வயது 175. கடந்த காலத்தை நினைத்துப் பார்க்கிறேன்.

நம்பமுடியவில்லை ஒரு நூறு ஆண்டுகள் இந்த நாட்டில் நான் வாழ்ந்திருக்கிறேன். நூறு ஆண்டுகளுக்கு முன்பாக நான் கேட்ட கர்த்தரின் சத்தம் இன்னும் என் காதுகளில் ஒலித்துக்கொண்டே இருக்கிறது.

"நான் உன்னைப் பெரிய இனமாக்கி, உன்னை **ஆசீர்வதிப்பேன்.** உன் பெயரைப் பெருமைப்படுத்துவேன். நீ **ஆசீர்வாதமாக** இருப்பாய். உன்னை **ஆசீர்வதிக்கிறவர்களை ஆசீர்வதிப்பேன்.** பூமியிலுள்ள உன் வம்சங்கள் எல்லாம் **ஆசீர்வதிக்கப்படும்**" (ஆதி 12:2–3).

**ஆசீர்வாதம் !**

அந்த அருமையான சொல்லை அன்று மாலை நினைத்தேன்.

நான் என் வாழ்வின் இறுதிக்கு வந்துவிட்ட உணர்வு வந்தது.

நூறு ஆண்டுகள் எனக்கு முன்பாக விரைவாக ஒரு கதைபோல் ஓட ஆரம்பித்தன.

பல ஆசீர்வாதங்கள் எனக்குமுன் வந்து நின்றன.

**கர்த்தரின் வார்த்தையைக் கேட்கும் பெறும் பேறு (பாக்கியம்) கிடைத்தது தான் முதல் ஆசீர்வாதம்.** அவர் என்னை அவருடைய பணிக்காக திட்டத்திற்காக அழைத்ததும் ஓர் ஆசீர்வாதம். கரத்தருக்குப் பலிபீடம் கட்டி அவரைத் தொழுதுகொள்ளும் ஒரு முறையை அறிந்ததும் ஓர் ஆசீர்வாதம். பலிபீடம் அமைத்தல் சிக்கேமில் தொடங்கியது (ஆதி 12:7). பின்னர் பெத்தேலுக்கு மேற்கே, ஆயீ என்னும் ஊருக்கு கிழக்கே அடுத்த பலிபீடம் அமைத்தேன் (ஆதி 12:8) பின் எகிப்துக்குச் சென்றேன். அங்கே விசுவாசம் தடுமாறிப் பொய் சொன்னேன். ஆனால் நான் திரும்பும்போது (அல்லது பார்வோன் எங்களை விரட்டி அடித்தபோது), போனநிலைமையிலும் அதிகப் பணக்காரனாகத் திரும்பினேன். அதுவும் ஓர் ஆசீர்வாதமே! திரும்ப பெத்தேலுக்கு அருகே வந்து நான் அமைத்த பலிபீடத்தண்டையில் கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொண்டேன் (ஆதி 13:4)!

**லோத்து!.** என் தம்பி மகன். முதலில் உதவியாக உதவி செய்ய வந்தான்.

பின்னர் சிக்கலாக மாறினான். ஆனால் அவனும் நானும் அமைதியாகப் பிரிந்தது அதைக் கானானியர் வியப்புடன் பார்த்தது இன்றும் நினைவில் வருகிறது. திடீரென அவன் சிறைப்பிடிக்கப்பட்டுப் போனான் என்ற செய்தி அறிந்து, ஆண்டவர் கொடுத்த துணிவுடனும், முரட்டு விசுவாசத்துடனும், 318 பேர் கொண்ட ஒரு விவசாயப் படையையும் மூன்று நண்பர்களையும் வைத்து நான்கு அரசர்களின் பயிற்சி பெற்ற படைகளைத்தாக்கி வெற்றிபெற்றது ஓர் ஆசீர்வாதமே. லோத்து காப்பாற்றப்பட்டான். சோதோம் அழியும் வேளையில் அவனுக்காக ஆண்டவரிடம் மன்றாடும் கிருபை கிடைத்ததும் ஒரு ஆசீர்வாதமே!

**சாராள்:** சாராயி என்ற பெயரில் அழைக்கப்பட்ட என் அன்பான ஆருயிர்த்துணைவியான மனைவியின் பெயர் சாராள் என்று ஒரு நாள் ஆண்டவரால் மாற்றப்பட்டது. 90 வயதில் அவள் ஈசாக்கைப் பெற்றது வாக்குத்தத்தத்தின் மகனைப் பெற்றது – ஆண்டவர் கொடுத்த மகத்தான ஆசீர்வாதம். இடையில் ஆகாரை அறிமுகம் செய்தது சிறிய தவறாக இருந்தாலும், அவளையும் மகன் இஸ்மவேலையும் அனுப்பிவிடச் சொன்னது என் உள்ளத்திற்கு வேதனையாக இருந்தாலும், அதுதான் ஆண்டவரின் திட்டம் என்று ஆண்டவரே சொன்னபோது சாராளின் வார்த்தைகள் தந்த ஆசீர்வாதத்தை இன்று நினைக்கிறேன். சாராளின் மறைவு ஒரு பெரிய இழப்பானாலும், அதன் மூலம் இந்த நாட்டின் ஒரு சிறிய நிலப்பரப்பிற்கு நான் இப்போது உரிமையாளன். ஒருநாளில் இந்த நாடு முழுவதும் என் சந்ததிக்குச் சொந்தமாகுமாம். அது ஒரு பெரிய ஆசீர்வாதம்.

**ஆகார்:** எகிப்திலிருந்து பார்வோனால் சாராளுக்குக் கொடுக்கப்பட்ட அடிமைப்பெண். சாராள் தனக்குப் பிள்ளைபெறும் திறமை இல்லை என்று தவறாகக் கணக்கிட்டு அவளை எனக்கு மறுமனையாக்கினாள். ஆகார் பெருமையால் விரட்டப்பட்டு ஓடினாள். பின் திரும்ப தாழ்மையாய் வந்தாள். எல்ரோகி (நான் காணும் தேவன்) என்று ஆண்டவருக்குப் புதிய பெயரைக் கொடுத்தாள். கரத்தர் நம்மைக் காண்கிறார் என்னும் ஒரு புதிய உண்மையை எங்களுக்குக் கற்றுக் கொடுத்தாள். அதுவும் ஓர் ஆசீர்வாதமே.

**இஸ்மவேல்:** ஆகார் என்னும் அடிமைப்பெண் எனக்குப் பெற்றுத்தந்த என் முதல் மகன். என்னை 'அப்பா' என்று முதலில் அழைத்தவன். இஸ்மவேல் என்னும் பெயர் "கடவுள் கேட்பவர்" என்ற அர்த்தமுடையது. அவனை நினைக்கும்போது உணர்ச்சி பொங்குகிறது. ஆனால் அவனையும், ஆகாரையும் அனுப்பிவிடும்போது ஆண்டவர் சொன்ன, "இஸ்மவேலுக்காகவும் நீ செய்த விண்ணப்பத்தைக் கேட்டேன். அவனை ஆசீர்வதித்து, அவனை மிகவும் அதிகமாகப் பலுகவும், பெருகவும் பண்ணுவேன், அவன் பன்னிரண்டு பிரபுக்களைப் பெறுவான். அவனைப் பெரிய ஜாதியாக்குவேன்" (ஆதி 17:20) என்ற வார்த்தைகள் நினைவில் வந்தன.

சாராள் மறைந்தபின் ஒரு நாள் அவன் என்னைப் பார்க்க வந்தான். அவனுடைய 12 பிள்ளைகளைப் பற்றிக் கூறினான். அவர்களுடைய பெயர்கள்:



1.நெபாயோத்; 2. கேதார்; 3. அத்பியேல்; 4. மிப்சாம்; 5.மிஷ்மா; 6. தூமா; 7. மாசா; 8. ஆதார் 9. தேமா; 10. யெத்தூர்; 11. நாபீஸ்; 12. கேத்மா (ஆதி 25:13–15). அது என் உள்ளத்திற்கு மகிழ்வைத் தந்ததுடன், ஆண்டவர் தம் வாக்குறுதிகளை எப்படி அழகாக நிறைவேற்றுகிறார் என்ற எண்ணத்தையும் தந்தது. என்னுடைய தளர்ந்த நிலையைப் பார்த்துச் சொன்னான்: *அப்பா நானும் தம்பி ஈசாக்கும் சமாதானத்துடன் இருக்கிறோம். உங்களின் இறுதிச் சடங்குகளை இருவரும் சேர்ந்து நடத்துவோம்.* (ஆதி 25:9). என் கண்களில் கண்ணீர் கசிந்தது. அண்ணனும் தம்பியும் சமாதானமாக இருப்பதே ஒரு பெரிய ஆசீர்வாதம் தானே!

**மெல்கிசேதேக்கு:** திடீரென சாலேம் (எருசலேம்) நகரின் அரசரும், ஆசாரியருமாயிருந்த மெல்கிதசேக்கின் நினைவு வந்தது. அரசர்களை வென்று திரும்பும் வேளையில் இந்த அற்புத மனிதர் என்னை ஆசீர்வதிக்க வந்தார். உணவும் திராட்ச ரசமும் கொண்டுவந்தார். அதுமட்டுமல்லாமல் தன்னை உன்னதமான தேவனின் (ஏல் எலியோனின்) ஆசாரியராக அறிமுகம் செய்தார். அவர்மூலம் இன்னும் ஆண்டவரை அறிய முடிந்தது. அதுவும் ஓர் ஆசீர்வாதமே!

**கேத்தூராள்:** இவள் என்னுடைய மற்றொரு மனைவி. அவள் மூலம் எனக்குக் கீழ்க்கண்ட ஆறு மகன்கள் பிறந்தனர்: 1. சிம்ரான்; 2. யக்ஷான்; 3. மேதான்; 4. மீதியான்; 5. இஸ்பாக்; 6. சூவாகு. இவர்கள் இஸ்மவேலைப் போன்றவர்கள். இவர்கள் இருந்தால் ஈசாக்குடன் போட்டி வரலாம். ( தம்பி மகன் லோத்துடன் வந்த சிக்கல் நினைவுக்கு வருகிறது). சாராள் எப்படி இஸ்மவேலை அனுப்பிவிடச் சொன்னாளோ, அப்படியே கேத்தூராளையும் அவள் பிள்ளைகளையும் கிழக்கே உள்ள கீழ் தேசத்திற்கு நன்கொடைகளைக் கொடுத்து அனுப்பிவிட்டேன். ஒருவகையில் பிரிவுகள் துன்பம் தரும் நிகழ்ச்சிகளே. ஆனால் ஆண்டவர் சொன்ன, "உன் வம்சங்கள் எல்லாம் ஆசீர்வதிக்கப்படும்" என்ற வாசகம் அந்தத் துன்பத்தைக் கொஞ்சம் மாற்றியது. எங்கு சென்றாலும், கேத்தூராளும், அவளால் வந்த என் ஆறு மக்களும் ஆசீர்வதிக்கப்படுவாரகள். கேத்தூராளும் ஓர் ஆசீர்வாதமே.

**ஈசாக்கு:** வாக்குத்தத்த மகன். எனது 100 ஆவது வயதில் பிறந்த அற்புதம்– ஆம் ஆண்டவர் கொடுத்த ஆசீர்வாதங்களின் உச்சக்கட்டம் அவனே. கோடிக்கணக்கணக்கான விண்மீன்களைப்போல் என் சந்ததி பெருகும் என்ற வாக்குத்தத்தத்தின் முதல் விண்மீன் அவன்தான்! அவனுடைய இளவயதில் அவனை மோரியா மலையில் மூன்று நாள் பயணத்திற்குப் பின் பலியிடச்சென்ற அந்த நிகழ்ச்சியை நினைக்கிறேன். அன்று அவன், "அப்பா, நாம் பலியிடப் போகிறோம். நெருப்பு இருக்கிறது. பலிபீடம் அமைக்கக் கட்டைகளும் உண்டு. ஆட்டுக்குட்டி எங்கே?" என்று கேட்ட கேள்வி இன்னும் என் காதுகளில் ஒலிக்கிறது. "தேவன் அதைப் பார்த்துக்கொள்ளுவார்" என்று நான் சொன்ன பதிலும் நினைவில் உள்ளது. அன்று பலியாக வேண்டிய அவனுடைய இடத்தில் வேறொரு ஆடு பலியானது. என்னுடைய இக்கட்டு வேளையில் என் தேவையைச் சந்தித்த தேவன் என்னும் பொருளடங்கிய "யாகுவே ஈரே" என்னும் ஒரு புதிய

# நடப்புச் செய்திகள்

✯ **நாடாளுமன்றம்** கேண்டீனில் எம்.பி.க்களுக்கும், பிற ஊழியர்களுக்கும் மானிய விலையில் உணவு வழங்குவது நிறுத்தப்பட்டு, சந்தை விலைக்கே உணவுகள் வழங்கப்பட உள்ளன என மக்களவைத் தலைவர் ஓம் பிர்லா தெரிவித்துள்ளார். எம்.பிக்களுக்கு மானிய விலையில் உணவு வழங்குதல் நிறுத்தப்பட்டதன் மூலம் ஆண்டுதோறும் உணவுக்கு மட்டும் ரூ.20 கோடி செலவு செய்யப்பட்ட நிலையில் அது குறையும் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

✯ **நியூயார்க்** இந்தியாவில் ஒரே நாளில் கோவி ஷீல்டு, கோவேக்சின் ஆகிய 2 தடுப்பூசிகளின் அவசர கால பயன்பாட்டுக்கு சமீபத்தில் அனுமதி அளிக்கப்பட்டது. அதைத் தொடர்ந்து உலகின் மிகப்பெரிய தடுப்பூசி திட்டத்தை இந்தியா கையில் எடுத்துள்ளது. அந்த வகையில் முதல் கட்டமாக 3 கோடி சுகாதார பணியாளர்கள், முன்கள பணியாளர்களுக்கு தடுப்பூசி போடும் திட்டத்தை பிரதமர் நரேந்திர மோடி கடந்த 16ஆம் தேதி தொடங்கி வைத்தார் நாள்தோறும் பல்லாயிரக்கணக்கானோருக்கு தடுப்பூசி போடப்பட்டு வருகிறது. இந்தத் திட்டத்தின் வெற்றிகரமான செயல்பாடுகளுக்காக இந்தியாவுடன் ஐ.நா சபையின் பல்வேறு அமைப்புகள் நெருங்கி பணியாற்றி வருவதாக தகவல்கள் வெளியாகி இருக்கின்றன. உறைவிட ஒருங்கிணைப்பாளர் ரெனாட்டால டெசாலியன் தலைமையிலான ஐ.நா குழு, இந்தியாவில் பிரமாண்டமான கொரோனா தடுப்பூசி திட்டத்தையும், பிரமாண்டமான தடுப்பூசி திட்டத்தின் ஐ.நா பங்குதாரர்களையும் ஆதரிக்கிறது என்று ஐ.நா பொதுச்செயலாளர் ஆன்டனியோ குட்டரெஸ்கின் செய்தி தொடர்பாளர் ஸ்டீபன் துஜாரிக் தெரிவித்தார் இதுபற்றி அவர் நிருபர்களிடம் குறிப்பிடும்போது, தற்போது உலகின் மிகப்பெரிய தடுப்பூசி திட்டத்துக்கான ஏற்பாடுகளை செய்து, தொடங்குவதற்கு ஐ.நா அமைப்புகள் நெருக்கமாக பணியாற்றி உள்ளன. இந்தியாவில் செவ்வாய்க்கிழமை நிலப்பரப்படி ஏறத்தாழ 5 இலட்சம் பேருக்கு தடுப்பூசி போடப்பட்டுள்ளது.

✯ **வாஷிங்டன்** அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் ஜனாதிபதி டிரம்ப், கடந்த ஒருமாத காலமாக பல்வேறு குற்ற வழக்குகளில் தண்டனை பெற்றவர்களுக்கு தண்டனை குறைப்பு மற்றும் மன்னிப்பு வழங்கும் நடவடிக்கைகளில் ஈடுபட்டு வந்தார். டிரம்ப் இப்படி பொது மன்னிப்பு வழங்கியவர்களில் பெரும்பாலானவர்கள் அவருக்கு நெருக்கமானவர்களே. தனது மகள் இவான்கா டிரம்பின் மாமனார் சார்லஸ் குஷ்னர், டிரம்பின் தேர்தல் பிரச்சார மேலாளர் பால் மனாபோர்ட், முன்னாள் ஆலோசகர் ரோஜர் ஸ்டோன் உள்ளிட்டோருக்கு அவர் பொது மன்னிப்பு வழங்கினார். இந்த நிலையில் ஆட்சியில் இருந்து வெளியேறும் கடைசி நாளிலும் டிரம்ப் தனக்கு நெருக்கமானவர்களுக்கு பொது மன்னிப்பு வழங்கும் நடவடிக்கையை மேற்கொண்டார். அதன்படி பணமோசடி வழக்கில் சிக்கிய தனது முன்னாள் ஆலோசகர் ஸ்டீவ் பானன் உள்ளிட்ட 73 பேருக்கு டிரம்ப் கடைசி நாளில் பொது மன்னிப்பு வழங்கினார். வெள்ளை மாளிகை அதிகாரிகள் எதிர்ப்பு தெரிவித்திருந்த போதும், ஸ்டீவ் பானனுக்கு பொது மன்னிப்பு வழங்கப்பட்டுள்ளதாக அங்கிருந்து வரும் தகவல்கள் தெரிவிக்கின்றன. ■

நன்றி இந்து தமிழ் திசை, தினத்தந்தி



## ஆன்லைனில் காணிக்கை அனுப்புபவர்கள் கவனத்திற்கு...

நீங்கள் இந்திய திருச்சபை வளர்ச்சி மிஷனின் ஊழியத்திற்கென்று காணிக்கை அனுப்பும் போது, எந்தக் காரியத்திற்காக பணம் அனுப்ப விரும்புகிறீர்களோ, அந்த வங்கிக் கணக்கில் உங்கள் பணத்தை செலுத்தி, 94421 50482 என்ற எண்ணுக்கு எஸ்.எம்.எஸ் அனுப்பும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறோம் நன்றி.

### பொதுவான காணிக்கை

Account Name : INDIA CHURCH GROWTH MISSION
Account Number: 10143136773
Bank : State Bank of India
Branch Name : Selaiyur, Chennai-73
IFSC Code : SBIN0007948

### ஆலயக் கட்டிட நிதிக்காக

Account Name : INDIA CHURCH GROWTH MISSION
Account Number: 11194454531
Bank : State Bank of India
Branch Name : Vinayaganagar, Madurai.
IFSC Code : SBIN0001479

### மருத்துவ நிதிக்காக

Account Name : ICGM MEDICAL EMERGENCY ENDOWMENT FUND
Account Number: 31961036921
Bank : State Bank of India
Branch Name : SELAIYUR, Chennai-73.
IFSC Code : SBIN0007948

**Registered with R.N.I Under No.TNTAM/2000/01585**
Postal Registration Number TN/MA/42/2021-2023
Posted at BPC Madurai - 625 001.
Date of publishing: 28th JANUARY 2021 Date of posting - 28,29 and 30th of every month
**Owned & Published by Irai Arasu Trust, from Nagamalaipudur, Palkalai Nagar, Madurai- 625 021 and Printed by Mr.Gangatharan at V.G. Printers, No.36.Kakkan Street, Shenoy Nagar, Madurai-20. Publisher & Editor: Mrs. Deepa Soundarapandian.**

*பொதுச்சேவகரிடமிருந்து...*

மக்களுக்கென ஒரு ஆராதனைக் கூடமும் அவசியமாக இருக்கிறது. இதற்காகவும் தொடர்ந்து ஜெபியுங்கள். இந்த ஊழியர்களை தாங்க முன்வரும்படி உங்களை அன்புடன் வேண்டிக் கொள்ளுகிறோம்.

இந்த இதழ் உங்கள் கைகளில் கிடைக்கும்போது ஐந்து ஆலய அர்ப்பணிப்புகள் பிப்ரவரி 14, 16-19 ஆகிய தேதிகளில் நடைபெறும் என அன்புடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

தமிழ்நாட்டில் பொதுத்தேர்தல் நெருங்கிக்கொண்டிருக்கிறது. இதற்காக ஊக்கமாக ஜெபிப்போம். தேவனுக்குச் சித்தமானவர்கள் தேர்ந்தெடுக்கப்பட, நியாயமான முறையில் தேர்தல் நடத்தப்பட ஜெபிப்பது நமது கடமையாகும்.

இந்திய திருச்சபை வளர்ச்சி மிஷனின் ஊழியங்களின் ஆசீர்வாதமும், வளர்ச்சியும் உங்களுடைய ஜெபத்தினாலும், பொருளுதவியினாலும் மட்டுமே.

கர்த்தர்தாமே உங்களை ஆசீர்வதித்து நடத்துவாராக.

கிறிஸ்துவின் சீடராக்கும் பணியில்.
**அருள்திரு.அ. லெஸ்லி நாகராஜன்.**
பொதுச்சேவகர்.

***If Undelivered please return to:***
**Valarum Vinnarasu, No.21. Kamarajar Street, A... Nagar,**
**East Tamb... 03916480**

To
10498
MR. K. JOHN,*
NO:F-4, PLOT NO:42.VIYASAR ST,
SUBIKSHA FLATS,EAST TAMBARAM,
CHENNAI - 600059
CHENNAI(Dist)

